பிஸ்மில்லா ஹிர்லஹ்மா னிர்றஹீம்



# முஹ்யித்தீன் ஆண்டவை சத்துரு சங்காரம்



இதில்

முகையித்தீன் ஆண்டவர்களின் 11-திருநாமங்களும்

அதன் முஅக்காலத்துகளும்

ஷை ஆண்டவர்களின் அந்தாதி மாலையும்

ஞான சொர்க்கபதியும்,

சத்தாது சொர்க்கங்கட்டிய கிஸ்ஸாவும்,

ஈமான் ஹாசில் இனிய முனஜாத்தும்,

முருது ஹாசில் முனஜாத்தும்,

அடங்கி யிருக்கின்றது.

---


சென்னை - இட்டா

**பார்த்தசாரதி நாயுடு சன்ஸ்**

சக்கரவர்த்தி பிரஸ்,

189, தங்கசாலை தெரு, சென்னை.

இதன் விலை] 1946 [ரூபா 1.

பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்



இஃது

முஹியித்தீனாண்டவர்களின்

11-திருநாமமும்

# து[illegible] அக்கலாத்துகளும்

---

யாஸையிது முஹ்யித்தீன் அம்றுல்லாஹி யாநூறுயீல்
யாஷைகு முஹ்யித்தீன் பலுல்லாஹியா அத்வாயீல்
யாஅவ்லியா முஹ்யித்தீன் அமானுல்லாஹி யாஷறுத்தாயீல்
யாபாபா முஹ்யித்தீன் நூறுல்லாஹி யாக்கம்றுயீல்
யாகவ்து முஹ்யித்தீன் குதுபுல்லாஹியா அஸ்மாயீல்
யாசுல்தான் முஹ்யித்தீன் ஸைபுல்லாஹியா அஜ்மாயீல்
யாகாஜா முஹ்யித்தீன் பர்மானுல்லாஹி யாத்தறுதாயீல்
யாமகுதூம முஹ்யித்தீன் புறுஹானுலல்லாஹி யாறாஹாயீல்
யாபாத்ஷா முஹியித்தீன் அறுஷுல்லாஹி யாமத்றுயீல்
யாதருவேஷ் முஹியித்தீன் ஹயாத்துல்லாஹி யாகத்றுயீல்
யாபகீறு முஹ்யித்தீன் முஷாஹிதுல்லாஹி யாஹூமாயீல்

பாயிதா

இந்தப் பதினொரு திருநாமங்களையும் மனப் பாடமிட்டு யாராவதொருவன் தன்னுடைய நாட்டத்தை நிறைவேற்றும் பொருட்டு துசி துப்புரவாகத் தனித்து ஓரிடத்தில் கிபலாவை முன்னோக்கி யுட்கார்ந்துகொண்டு ஓதி வருவானாகில் அவனுடைய ஹாஜத்துகளை யெல்லாம் அல்லா ஹுத்த ஆலாவுடனே நிறை வேற்றி வைப்பான் முஜர்றபு.

இ ஃ து

திருநெல்வேலி ஜில்லா பொட்டல் புதூரையடுத்த
கிருஷ்ணபுரத்தில் வசிக்கின்ற புண்ய குலத்துங்கரான
ஜெயிலானி பக்கீறு லெப்பை ஆலிமவர்களா லியற்றப்பட்ட

# முஹியித்தீன் அந்தாதி மாலை

காப்பு

அறுசீர்க் கழிலடியாசிரிய விருத்தம்

சீர்கொண்ட மக்கம் வாழுந் திருநபி தமக்கன்பாக
நேர்கொண்ட பேர ராகி நீணிலத் தொலிகட் கெல்லாம்
பேர்கொண்ட வரசாய்வந்த பெரும்புகழ் முஹியித் தீன்மே
லேர்கொண்ட மாலை பாட விறையவா துணைசெய் வாயே. 1

ஆதியைப் புகழ்ந்து வள்ள லஹ்மது நபிக்கு மால்கள்
நீதிசே ரஸ்ஹா பிக்கு நிதம்ஸல வாத்துக் கூறிச்
சோதிசேர் முஹ்யித் தீன்மேற் றுலங்குமந் தாதி தன்னை
யோதவே யிலாஹீ யென்னு முனைடயவா துணை செய்வாயே. 2

நூன்முகம்

உடையவ னுண்மைத் தூத ருயர்திரு நபிதன் செல்வி
சுடரொளி பாத்தி மாதந் தோன்றல்க டம்மின் முன்னோர்
நடைபெறு மரபிற் றோன்றி நகர்பகு தாது தன்னில்
வடிவுற வரசாய் வாழும் வல்லப முஹ்யித் தீனே. 3

வல்லவ னருளா லும்போ டிமையவர் மக்கத்த பேய்திச்
சொல்லுமங் கிளைஞர் தம்மைத் தூயவ னெலிக்கன் பாக
நல்லிடம்விட் டங்கு தானே நல்குவீ ரென்னக் கூவி
யெல்லையி லுரைப்ப மேன்மை யுயர்புகழ் முஹ்யித் தீனே. 4

உயர்புகழ் ஷெய்கு ஹம்மா துமக்கையா லாற்றிற் றள்ள
வியனுறுங் கபுறு ளக்கை விதனிக்க வுமைக்கண் டன்னோர் [ச்
செயல்பொறுத் தருள்வீ ரென்னச் சிந்தைவைத்திற பாற்கெஞ்சி
செயமுற வைபை நீக்குந் திருவளர் முஹ்யித் தீனே. 5

வளரிசை நபிகள் கோமான் முஹம்மது நபியினு ருள்ள
மளவுறு வுவகை பூத்தே யன்புடன் மிஃறு ஜாக்கு
நளிர்பெற வேகும்போது நன்மலர்த பதத்தைத் தோளாற்
களிர்பெறத் தாங்கு மப்துல் காதிறே முஹ்யித் தீனே. 6

காதிறென் றருள்கொண் டோங்குங் கத்தனிறெலிமா ரெல்லாம்
பாதபங் கயத்தை யன்பாய்ப் பண்புடன் புயத்தின் மீதி
லாதரவாகத் தாங்கி யகமகிழ்ந் திசைந்து போற்றும்
நீதரே கவ்துல் அஃலம் நிச்சய முஹ்யித் தீனே. 7

நிச்சயப் புறுகான் வேத நிருபரெம் மிறசூல் மார்க்க
மெச்சுமோர் மனுவின்ரூப மெடுத்தெழி லழிந்தே னும்பா
லிச்சையிற் றிருத்து மென்ன விசைந்திட விருத்தலோடு
முச்சிதம் பெறச்செய் கோவே யொண்புகழ் முஹ்யித் தீனே. 8

ஒண்டரும் ஷாபி யிய்யி ஆவப்போடு மிருக்கு நாளிற்
கண்டரும் ஹன்ப லிய்யைக் கருத்துட னெடுத்தன் பாக
வண்டரு மிவைரண் டன்றி வலியமேன் மகாமி லானீர்
வெண்டரு நானுங் கைபீர் வேதசீர் முஹ்யித் தீனே. 9

வேதிய ரொருவர் தன்றேள் மீதுறும் பதங்கொள் ளேனென்
றோதலா மூவருக் குற்ற வொலித்தனம் பறிபோய்ப் பின்னர்
ரோதறுந் தவபாத தன்னைக் கூறிய ஸப்பினாலே
தீதினைப் பொறுத்தன் னோர்க்குச் செயம்புரி முஹ்யித் தீனே. 10

செயமொடு மொருவ னேற்பாற் சென்றவன் றனித்தங் குற்றுப்
பயமுடன் றக்அத் தீராற் பணிந்துபின் னுமது நாமம்
வியனுட னீரைந்து நூற் விடுத்தமே விளிப்பா னாகிற்
சுயமுடன் பிரத்தி சொல்லுந் துய்யசீர் முஹ்யித் தீனே. 11

துய்யநல் லருள்கொள் வாரி தோய்ந்துநா மோாறு மன்பர்
யையமன் றிடை விடாம லணியுறு முமது பாதம்
பையலென் மனது கூர்ந்து பண்புடன் புகழ்ந்து போற்றி
செய்யநற் கிருபை செய்யுஞ் செம்மலே முஹ்யித் தீனே. 12

செம்மலே இஷாவுக்காகச் செய்திடு முலூவு கொண்டே
யம்முறு ஸாபிஹை நன்று யன்புட னற்ப தாண்டு
செம்மையா யிறையை நாடிச் செயமுடன் வணக்கஞ் செய்த
செம்மணிச் சுடரே வாழ்வார் தேவரீர் முஹ்யித் தீனே. 13

தேவர்க ளேவல் பூண்ட திருவிறசூ லுல்லாவுங்
காவல ரலியும் வந்தே கருணையுற் றுமது வாயி

லாவலா யுமிழ்ந்த பின்ன ரகமகிழ்ந் தறிவெல் லோர்க்கும்
நாவுரை செய்த மேன்மை நாயக முஹ்யித்தீனே. 14

நாயக மான வள்ள லயமுடன் கெற்பந் தன்னிற்
சேய்தா யிருக்குநாளிற் செயநபி கிலுறு வந்தே
வாயினு னன்மா ராயம் வழுத்திட வரிசை பெற்ற
தூயநபி நாயி பென்னுந் தோன்றலே முஹ்யித் தீனே. 15

தோன்றல்பெற் றில்லாமை யாலோர் தோகைநுஞ் சமுகம்வந்து
தோன்றல்பெற் றிடவே கேட்ப துப்புர வமுத வாயாற்
தோன்றல்பெற் றிடுவா யென்னச் சொற்றிய வாய்மை வண்ணந்
தோன்றல்பெற் றிறைஞ்சிப் போற்றுஞ் சுடர்மணி முஹியித்தீனே.

சுடர்மணி யொளிவு வாய்ந்த தூயவ ரபூஸ ஈதி
னிடமடுத் தன்னோர் கையா லினிதுறு மமுத முண்டு
திடந்தரு நவஸீஹத் தேற்றுச் சிந்தையுந் தெளிவுற் றோங்கித்
தடஞ்செறி பகுதா தூர்வாழ் தருமதி முஹியித் தீனே. 17

மதியுறும் வணிக ரேகி வருநெறி கள்வர் வந்து
முதலுடன் பலதுங் கொள்ளை முடித்திடக் கொடுத்த வன்னோ
ரிதயமுண் ணேற்ற போதே யிணையடிக் கபுகா பாலே
நிதியுமற் றுளது மீட்டு நித்தில முஹியித் தீனே. 18

நித்தில நகையு ளாஞ்கர் நேத்திர மடந்தைக் குற்ற
சித்திரக் குயத்தைக் கண்டு சிலந்தியென் றெண்ணங் கொண்டு
வற்றிட வியற்ற வன்னாள் மறுகிவந் திறைஞ்சிக் கேட்ப
சித்தம்வைத் ததனை மீட்டுந் திருப்புகழ் முஹியித் தீனே. 19

திருப்பதந் தெரிசித் தோர்மன் றிரவியச் சுமை மீரைந்து
விருப்பமுற் றளிப்பத் தாங்கள் வெறுத்திட மறுத்து மன்னோ
னுரைப்பதா லெடுத்தே யததை யுதிரமா யோடச் செய்தீர்
கருப்புசூழ் பகுதா தூர்வாழ் காரண முஹியித் தீனே. 20

காரணக் குரிசிலான கவ்து நாயகமே செந்த
வாரண வென்பு தன்னை மணமகிழ்ந் துவந்தன் பாகப்
பூரண வுடலோ டாவி பொருந்தியே கூவச் செய்தீ
ராரணர்க் கரசாய் வந்த ஆரிபே முஹியித் தீனே. 21

ஆரிபே மருரி பாவுக் கப்புறத் தப்பு றத்தே
காரியாய்க் கலந்து நின்று கருத்தினைச் செலுத்துங் கோவே
சீரிய லனவை யாருஞ் செப்புதற் கடங்கா தும்மை
தாரியல் புயத்தீ ரெங்கள் ஸாஹிபே முஹியித் தீனே. 22

ஸாஹிபே யடியே னுந்தஞ் சரணதா மரையை நாடித்
தேகமும் வாடி வாடிச் சிந்தையுள் வருந்தி நானுந்
தாகமே பெருக்க முற்றுத் தவிக்கின்ற வடியே னுக்குப்
பாகநல் லருளே செய்வீர் பாக்கிய முஹ்யித் தீனே. 23

பாக்கியமுற் றோங்கு மிக்கப் பழனஞ்சூழ் பகுதா தூரி
லோக்கமுற் றிருந்து வேத வொண்முர சோலசை நாளும்
நீக்கமுற் றிடாம லெங்கு நிறைந்தெழுந் தொலிக்கக் கோண்மை
யாக்கமுற் றியற்று நீதி யாண்டகை முஹ்யித் தீனே. 24

ஆண்டகை யடியன் வார்த்தை யணுவினும் பிசகி டாமற்
பூண்டிடு மதனு லும்மைப் புகழ்வதை யறிந்து கள்வர்
காண்டுளம் பதறி யன்பாய்க் கருத்துடன் தவ்வா வோதுந்
தூண்டிடாத் தீபமென்னத் துலங்கிடு முஹ்யித் தீனே. 25

துலங்கிய சமுகந் தன்னிற் சுருதியர் றாறுபேர்கள்
பெலங்கொளு மசலாக்கேட்ப பெருமையுற் றடைந்தோர்நெஞ்சங்
கலங்கியே மறந்து நிற்பக் கண்டந்த மசலா வோடு
நலங்கொளு மதின் ஜவாபு நவிற்றிய முஹ்யித் தீனே. 26

நவிலுமோர் வணிகர்க் கன்பாய் நன்மொழி களையு நல்கி
யுவர்தமக் கோதுகின்ற வடலுறும் வீத லோடுஞ்
சவுரியர் கரத்திற் கொள்ளுந் தனத்தையும் விலக்கிக் காக்கு
நவமணிச் சுடரே வண்மை நாதரே முஹ்யித் தீனே. 27

நாதரே றமலா னிந்தை நகருள்ளோர் கண்டி டாம
லோதுறும் மவையின் பீரை யுண்டிடா திருப்பக் கேட்டே
யாதலா லன்னோர்க் கெல்லா மகந்தனி லையந் தீர்ந்து
போதுநல் விரத நோற்றார் புண்ணிய முஹ்யித் தீனே. 28

புண்ணிய நயந்த வுந்திப் பொற்புறு கமலத் துள்ளே
தண்ணெழி லுறவே காப்பந் தரித்தடைந் திருக்கு நாளிற்
றண்ணுற வனையைக் கூளி தீண்டுதற் கடுத்த போதி
லொண்ணுறுங் கரத்தால் வீக்கு மோங்கிலே முஹ்யித் தீனே. 29

ஓங்கிய கப்ப லோடு முவரியின் மாய்ந்தோன் றன்னைப்
பாங்குட னனைதன் பாலிற் பண்புடன் மீட்டுங் கோவே
தீங்கணு காமற் காத்துச் சிந்தைவைத் திரண வாழ்வை
நீங்கிடா தருளிச் செய்வீர் நீதரே முஹ்யித் தீனே. 30

நீதமே நிறைந்த வேத நெறிமுறை யதனை நாளுங்
கோதறச் செலுத்துங் கோள்மைக் குருநபி தமக்கன் பான

சோதிசேர் நாயி பாகத் தோன்றிய தூய மேரே
மாதவப் பொருளே யெங்கண் மன்னரே முஹ்றயித் தீனே. 31

மன்னர்க் கரசே நாளு மாதவர்க் கரசே வாழும்
பொன்னவர்க் கரசே யும்பர் போற்றிடு மரசே யென்ற
னின்னல்தீர்த் திரண வாழ்வை யிதயமுற் றருளிச் செல்வீர்
சென்னல்சேர் பகுதா தூர்வாழ் செழுமதி முஹ்றயித் தீனே. 32

செழுமதி கதிரு மூர்க்கை திரைதரி புவிவா னோடு
மெழுதுகோல் வேதி கையு மியல்குறு சறுஷி யாவு
மெழிலுறப் படைத்தே யாளு மிறையவன் றனக் கன்பான
பழுதறு கலீபர வென்னும் பாத்திப முஹ்றயித் தீனே. 33

பாத்திப கவ்தே யிந்தப் பாருள்ளோர் காணச் சேனங்
காற்றொடு சிந்தி வீழக் கருணையுற் றதனைப் பின்னுஞ்
சேர்த்துயர் நிவர்ந்து செல்லச் செயமொடு பொருந்தி விட்டீர்
நேத்திர மணியே வன்மை நிமலரே முஹ்றயித் தீனே. 34

நிமலரே வலிமை நோக்க நினைத்துவந் திடுமோர் ஷெய்கு
தமக்குறுங் கொடியே வேங்கை தன்வயி னெழுமை பூண்ட
ஞமலிசென் றதனைக் கொன்ற நற்றிரங் கண்ட னோர்நு
மமுதொக்கு மலர்த்தாள் போற்று மதிபரே முஹ்றயித் தீனே. 35

அதிர்தரு மது ரஸத்தை யடுத்து மாதவர்கள் சூழ்ந்தே
யதிக்நல் ஹதீது கேட்கு மவர்களி லொருவ ருக்குத்
தகியுள மல பாதைக்காய்த் தாங்கிடாச் சமைய மன்னோர்
துதிசெய வுதவி நல்குஞ் சுருதிதேர் முஹ்றயித் தீனே. 36

சுருதியி னொலியரூது துலங்கிய சமுகந் தன்னிற்
றெரிதர நாட்கள் வாரந் திங்களுந் திரண்டு வந்து
தருதிரை யுவர்சூழ் பூமி தனிலுறுங் கரும மெல்லாம்
விரிவதா யெடுத்துக் கூறும் வேந்தரே முஹியித் தீனே. 37

வேந்தரே கண்டுஞ் சாது விரதமே யீரா றாண்டு
சாந்தமுற் றிடை விடாமற் றகுதியாய் நேரற்ற கோவே
பாந்தள்வந் திடுக்கஞ் செய்யப் பயந்துளம் பேசி யாதங்
காய்ந்த நல்லறிவோ டுற்ற ஆலிமே முஹியித் தீனே. 38

ஆலிமே கழ்துல் அஃலை மானவோர் நாமந் தன்னை
மூலமு முடிவு மில்லான் முகாத்தபாய்க் கூறுஞ் சத்தம்

பாலினிற் றிடமாய் வந்து பண்புறச் செவியிற் கேட்குஞ்
சீலசர்க் குருவே வள்ளல் செய்யிதே முஹியித் தீனே. 39

செய்யிதே முலக்க பென்னுஞ் சிறப்புறு நாமந் தன்னைத்
துய்ய நன்னபியின் மார்க்கஞ் சுகமொடு மெதிரிற் சொன்ன
தையற வதனை யீந்த வள்ளல் நாயகமே நாளும்
வையமும் வானும் போற்று மகாதவ முஹியித் தீனே. 40

மகாதவ மிகவே செய்யு மறையவர் தங்கட் கெல்லாஞ்
சிகாமணி யாகவந்த செய்யிதே யொலி யுல்லாவே
மகா மஃதேழி னுற்ற மகத்துவ முடனே வல்லோன்
விகாவுடன் கலந்து நிற்கு நிண்ணய முஹியித் தீனே. 41

நிண்ணய வொலிமார் சேவ னிகழ்த்தும்வாய் மூடிக் குன்று
மொண்ணுறு முமதுசேவ லொடுக்க நாளளவு நன்று
யெண்ணமின் றிடை விடாம லிப்புவி சிறப்புற் றோங்க
வண்ணமாய்க் கூவி நிற்கு மதிபரே முஹியித் தீனே. 42

மகிபரே யொருவனும் பான் மனதுறு நாட்ட மெல்லாம்
பகருபு கேட்பா னென்னிற் பழுதன்றிப் பெருவா னுண்மைச்
செகமெல்லாம் புகழீ ருங்கள் சிந்தைவைத் தென திரப்பை
மகிழ்கொளக் கிருபை செய்வீர் வள்ளலே முஹியித் தீனே. 43

வள்ளலும் மடியார் தம்மின் மனமகிழ்ந் தியல்பாய்ச் சேர்த்துக்
கொள்வீ ரென்றிசைத்தே னிந்நாட் கூறுநா யடியேன் றன்னைத்
தள்ளிடா வண்ணங் கூட்டித் தயவுட னிரங்கிக் காத்தே
யுள்ளம்வைத் துதவிசெய்வீ ரெண்ணலர் முஹியித் தீனே. 44

ஒண்ணல ரெவர்க்கு மேலா முயர்திரு நபிக்கு மன்னோர்
புண்ணிய ஆல்களுக்கும் புக ழுக ஹாபி மார்க்கு
மெண்ணறும் ஸலாவாத்தாதி யிடா விடா துரைப்பா யன்பா
யண்ணவே யடியேன்மீது வருள் செய்வீர் முஹியித் தீனே. 45

அருள்வள ரலிபு தால்மீ மக்காத் தெண்ண மட்டாய்த்
திருவளர் முஹீயித் தீன்மேற் செழுங்கிஷ்ணு புறத்தின் மேவு
மருவளர் மகுதூ மீன்ற மகன் ஜயிலானி பக்கீர்
பொருள் வளர் மாலைதன்னைப் புந்திபூத் துரைத்தா னாமீன். 46

---

பிஸ்மில்லாஹி அலாபிய்யத்தி



சுல்தான் அப்துல்காதர்

என்னும்

# முஹ்யித்தீ ஞண்டகையவர்கள்

# சத்துரு சங்காரம்



திசைநாலுங்கட்ட—அதற்குக் கவி

முத்திரை யாச்சுது முகையதீ னென்ற சொல் நெஞ்சகத்தே
பத்திரை யாச்சுது பரமானந்த மாச்சுது பசாசுகளே
தந்திர மாச்சுது தராதல மாகப் பயல் தனக்கு [கே.
கைத்திர மாச்சுது முகியித்தீனென் றட்சரந்திசைநாலுங்கட்டுதற்

இதற்குச் சக்கரம்




இதன் பாயிதா

*அதாவது:*—இராத்திரி காலங்களில் தனித்துயாராவது போகுங்காலத்தில் இந்தப் பாட்டை மூணுதரம் வோதி நெஞ்சில் ஊதிக்கொண்டு போனல் உங்களுடைய கண்ணுக்கு யாதாமொன் றுந் தோன்றமாட்டாது. பிசாசு, பூச்சி, பல இனங்களாகியவைகள் யாவற்றும் உங்கள் முன்னிற்கமாட்டாது.

### சத்துரு அற—அதற்குக் கவி

கட்டிய கட்டுறை மூன்னரு ளாகிய முச்சுடரின்
நட்டுறையாகி வளர் நத்தம் அட்சரம தாகியெழும்
பட்டிதுபட்டு தென்றே
ஆ ஈ ஊ வென்றட்சரத் தன்பு கொண்டு
முட்டிடப்பாய்ந்து என்சத்துரு ரிணக்குடல்வாங்கு முகையதீ
னென் றட்சரத்தால்

### இதற்குச் சக்கரம்



### இதன் பாயிதா

இந்தப்பாட்டை நீங்கள் துப்புரவான வெள்ளைப் புடவை உடுத்தி வெள்ளைப் புடவை விரித்து பன்னீருஞ் சந்தனமும் கரைத்து தெளித்து ஊதுவத்தி கொளுத்திவைத்து மேற்படி பாட்டை 1128-தரம் படிக்க ரஹ்மான் கிருபையால் உங்களுடைய ஹாஜத்து உடனே நிறைவேறும்.

### சூனியம் பில்லிமுறிய— அதற்குக் கவி.

வஞ்ச மகற்றி வழியேவல் மாற்றி வரும் பில்லியை
அஞ்சப் பிடித்து அறைக்கு ளடைத்தே அதின் குபிரின்
நெஞ்சைப் பிளந்து நிணக்குடல் வாங்கி நெரி நெரித்து
பஞ்சாய்ப் பறத்திப் பரியந்த மாத்திவைப்பீர் முகையதீ னென்ற
நாமம் கொண்டே.

### இதற்குச் சக்கரம்

| | |
|---|---|
| த | ம |
| ந | ம |

### இதன் பாயிதா

இந்தப்பாட்டை 1128-தரம் ஊதுவத்தி கொளுத்திவைத்து படிக்க சித்தியாகிவிடும். பின்னாடி யாருக்காவது பேய், பிசாசு, வஞ்சனை, பில்லி சூனியமும் யேவல் இதுகள் இருந்த பேர்களுக்கு அவர்களை முன்னேவைத்து சாம்பிராணி புகைத்து மேற்படி பாட்டைப் படிக்கப் படிக்க எப்பேர்க்கொத்த பேய்களானாலும் உடனே ஆடும் கதறிக் கதறி நான் போய்விடுகிறேனென்று சொல்லும் புதுக்கலயத்தில் தண்ணீர் வைத்து மேற்படி பாட்டை ஏழுதரம் படித்து ஓதி ஊதி மேற்படி தண்ணீரை 3-தரம் முகத்திலடித்து 3-தரம் குடிக்கக் கொடுக்கவும் இப்படி 3-நாள் செய்யவும் எப்பேர்க்கொத்த பேய், பில்லி, வஞ்சனை, சூனியம் இதுகளெல்லாம் விலகிப்போகும்.

### மாத்தான் நாவடக்க—அதற்குக் கவி

பொல்லாத வஞ்சன் வகையான சூத்திர மொன் றறியான்
நில்லாத கர்மி யமரிர் செய்தானவ னீச னல்லோ
நல்லா ரதனைப் புகழ் நாயகனைத் தொழும் நானடியேன்
வல்லா கிருபை முகையதீனென் றட்சர வாளு முண்டே.

### இதற்குச் சக்கரம்




### இதன் பாயிதா

அதாவது:—மேற்படி சக்கரத்தை வெள்ளித் தகட்டிலெழுதி ஊதுவத்தி கொளுத்திவைத்து 212-தரம் படித்து மேற்படி தகட்டை மடித்து மடியில் வைத்துக்கொண்டு உங்களுக்கு மாத்தான் இருக்கப்பட்ட இடம் போனால் ரஹ்மான் கிருபையால் உடனே உங்களிடத்தில் வணங்கிப் பேசுவார்கள்.

வேடிசத்தமறுக்க—அதற்குக் கவி

உண்டே யெனது உரையாணி பொட்டுரை ஊக்கமலம்
நண்டே நடுவணை யாகிய நாட்டம் நடுவெளியில்
கொண்டே வுருகுப்பி பீரங்கி வாங்கி யிழுத்துவைத்து
குண்டே முகையதீனென் றட்சரப் பொறிதட்டித் தீய்ந்ததுவே.5

இதற்குச் சக்கரம்



பசாசு மாறல்—அதற்குக் கவி

தீய்ந்தது குண்டு தெறித்தது சத்துரு தேகந் தன்னில்
மூய்ந்தது போக்கு மற்றேயிப் பேய்களைப்போல் கரித்து
ஈய்ந்தது யென் குருநாதர் முஹம்மது ஈரெழுத்தும் [யிலே
ஆய்ந்துருக்கொண்டீனை ஆதரிப்பீர் முகையதீனென்றட்சர ஆசை

இதற்குச் சக்கரம்




இதன் பாயிதா

அதாவது:—மேற்படி சக்கரத்தை தாம்பிரத் தகட்டிலெழுதி மல்லிகைப்பூ போட்டு சாம்பிராணி புகைத்து ஊதுவத்தி கொளுத்திவைத்து மேற்படி சக்கரத்தை முன்னேவைத்து 1128-தரம் படித்து தகட்டை மடித்து வெள்ளி தாயித்துக்குள் அடைத்து பெண்களுக்குப் போகாத பிசாசுகளா யிருந்தால் தாயித்தைக் கழுத்தில் போட உடனே போய்விடும். 6

ஏவல் மாற்ற—அதற்குக் கவி

ஆசை யடங்கும் அலங்கார வட்டத்தி னவ்வெழுத்தை
பூசை இட்டேவுலி நாதத்தைப் பூட்டி யுணர்ந்திருந்தேன்
ஓசை இட்டேவுலி குத்தேவல் தன்னைக் குறித்தறுத்து
பாசமுத்தேவலை மாத்திவைப்பீர் முகையதீ னென்ற வாசியிலே.

இதற்குச் சக்கரம்



இதன் பாயிதா

அதாவது:—மேற்படி சக்கர்த்தை ஈயத் தகட்டிலெழுதி சாம்பிராணி புகைத்து பாணங்கள் கரைத்துவைத்து எலுமிச்சம் பழம் 3-வைத்து ஊதுவத்தி கொளுத்தி மேற்படி பாட்டை 112-தரம் படித்து தகட்டை மடித்து மெழுகு துண்டில் பொதிந்து பெண்களுக்காவது ஆண்களுக்காவது ஏவல் செய்திருந்தால் பெண்களுக்குக் கழுத்தில் போடவும் ஆண்களுக்கு இடுப்பில் கட்டவும் புதுக் கலயத்தில் தண்ணீர் வைத்து மூன்று நாளைக்கு ஒவ்வொரு நாளைக்கு 11-தரம் தண்ணீரில் ஓதி ஊதி அவர்களுக்கு குடிக்கக் கொடுக்கவும் றஹ்மான் கிருபையால் உடனே மாறிவிடும்.



எமனை நிறுத்த—அதற்குக் கவி

வாசியை வாங்கி வடுகலை யேற்றி வகாரெழுத்தில்
ஊசியை நாட்டி உயிர்நிலை பூட்டி உயிர்த்தெழுந்த
நாசிக்கு மேலே நடுவனை நாட்டத்தைப் பூசித்துயான
தேசிக்கும் வாசினை முகையதீன் சூகிபு பூரியமே.

இதற்குச் சக்கரம்



எதிரி மாறல்—அதற்குக் கவி

பூதிய வசம்பு காரசுத்தும் ஆனந்த நாயகமே
ஆதியே யுன்னை யறியாத பேரை யறுத்தறுத்து
மாதிய மன்னி மகருச கன்னியுன் அஞ்செழுத்தை
ஓதிய சூட்சமு கையதினென் றட்சர உத்தையமே. 9

இதற்குச் சக்கரம்




உடல் பிரிவு—அதற்குக் கவி

உத்தைய முத்தி உறவா யெழுந்தது பஞ்சரைக்குள்
பத்திரை ஞானப் பரம்பொரு ளாகிய பாசரைக்குள்
எத்திய காலம் மெழுந்தொரு லாமுஹே மீமுடனே
முத்திரை யாகுமுகைய தீனென் றட்சரமூல மனோன்மணியே.

இதற்குச் சக்கரம்



துஷ்ட தேவதையடக்க—அதற்குக் கவி

மூலஆதார முனையது வட்டமு தாரிக்குள்ளே
கோலதேவதை கணபதி நிற்குமா ணிக்கவண்ணம்
மாலைச்செப்புறத் தம்பூமயில் நிலை அத்திவிருட்சமல்லோ
சாலவருங்குரு முகையதீன் சாகிபு கோருவனே.

இதற்குச் சக்கரம்




இதன் பாயிதா

எப்பேர்க்கொத்த துஷ்ட தேவதையா யிருந்து யாருக்கும் அடங்காமல் பிடித்திருந்தால் 3-நாளைக்கு அவர்களை முன் னிறுத்தி மேற்படி சக்கரத்தை வெள்ளிப் பீங்கானில் யெழுதி ஒவ்வொரு நாளைக்கு 2-தரம் படித்து தண்ணீரை வூத்திக் கரைத் துக் கொடுக்க தேவதை அடங்கி உடனே போய்விடும். 11

சிந்து—அதற்குக் கவி

கோவணி சித்து குருமணி முத்துக் குழந்தையல்லோ
பாவணி பச்சை பவளம்நிறம் வெள்ளை பளபளத்து
மாவணி கச்சு மனோன்மணிப் பச்சை மரகதமாம்
பூவணி பிச்சி முகையதீன் சாயபு பூபதியே.

இதற்குச் சக்கரம்



இதன் பாயிதா

நீங்கள் யாராவது குளித்து வெள்ளைப் புடவை தலையில் கட்டி வெள்ளைப் புடவை விரித்து பன்னீருஞ் சந்தனமுங் கரைத்து அதின்மேற் றெளித்து ஊதுவத்தி கொளுத்தி மேற்கு முகமாக விருந்து மேற்படி பாட்டை 1128-தரம் படிக்க பச்சை வடம் தரித்து முகையதின் அப்துல்காதிர் நாயகம் அவர்கள் குழந்தை பிள்ளையாக உங்களிடத்தில் வருவார்கள் அவர்களால் உங்களுக்கு அநேகங் காட்சிகள் கிடைக்கும்.

வாலை வரவு—அதற்குக் கவி

பூபதி அசுபதி பரணிகார்த்திகையு ரோகணியும்
மாபதி வச்சநடந்து மனோன்மணி நாயகமே
ஆபதி ராசியில் மேடமிடபங் தனைவளைந்தே
வாபதி நாயக முகைதீன் சாகிபு வல்லபமே.

இதற்குச் சக்கரம்



இதன் பாயிதா

மேற்படி சக்கரத்தை பொன் தகட்டில் எழுதி சாம்பிராணி புகைத்து சந்தனம் பூசி தகட்டை முன்னேவைத்து மேற்படி பாட்டை 2128-தரம் படிக்க வாலைப்பெண் வடிவமாக மகா அழகு சௌந்தரியத்துடனே உங்கள் முன்னே வருவார்கள் நீங்கள் கண்டால் மருண்டிட வேண்டாம் அந்தப் பெண் நாகரிகமான வார்த்தைகளோடு நீங்கள் கேட்கப்பட்ட காரியங்களை நடத்தித் தரும்.

போகும் காரியம் வெற்றியாக—அதற்குக் கவி

வல்லமை மந்திரம் ஓங்காரமிட்டு உலாவரைக்குள்
செல்லவளருந் திருக்குரு ஆனந்தத் தீபமணி
இல்லம் நிறைந்து இலங்குது வாரங்க ளெங்குமூட்டி
சொல்லுக் கடங்காது முகையதீன் காரணச் சூட்சியமே.

இதற்குச் சக்கரம்




இதன் பாயிதா

மேற்படி சக்கரத்தை வெள்ளித் தகட்டில் எழுதி மல்லி கைப்பூ மேலேவைத்து நீங்கள் துப்புரவாக குளித்து மூழ்கி ஊதுவத்தி கொளுத்திவைத்து மேற்படி பாட்டை 1128-தரம் படித்து மடித்து மடியில் வைத்துக்கொண்டு போனால் ரஹ்மான் கிருபையால் நீங்கள் போறகாரியம் விர்த்தியாகும் யாராவது சந்தேகித்தால் பாவியாய்ப் போய்விடுவான்.

தலை திருப்ப—அதற்குக் கவி

காரணமாகிய எதிர்வீடு வாசற்குங் கண்மணியே
பூரணமாதிபூத்த நிலைமுகப் பூபதியே
வாரணமஞ்சரை அட்சரமாறித் தலைதிருப்பத்
தாரணிமுத்துமுகையதீ னாண்டவர் தரணிமுத்தே.

இதற்குச் சக்கரம்



இதன் பாயிதா

உங்களுக்கு யாருக்காவது ரொம்பவும் இக்கட்டான காரி யங்களாக இருந்தால் மேற்படி சக்கரத்தை தாம்பிரத் தகட்டி லெழுதி மல்லிகைப்பூ வைத்து பானக்கம் கரைத்துவைத்து பன் னீருஞ் சந்தனமுந் தெளித்து ஊதுவத்தி கொளுத்தி மேற்படி

பாட்டை 1128-தரம் படித்து மேற்படி தகட்டை மடித்து நூல் கயிற்றால் கட்டி இடுப்பில் போட்டுக்கொண்டு போனால் ரஹ்மான் கிருபையால் அந்த இக்கட்டுகளெல்லாம் உடனே தீர்ந்துவிடும் யாராவது சந்தேகித்தால் முனாபிக்கவான் நஊதுபில்லாஹி மின்ஹா. 15

ஈட்டி குத்துவிலக—அதற்குக் கவி

முத்தனிபிட்டு முதநாளி களிட்டுமுச்சுடரின்
பத்தினிவைத்துநடுவிட்டுப் பார்வையைவிட்டு
குத்திட்டுக் கூவிட்டுக் கூசாதிட்டமான பீடமதில்
சத்திட்டிருக்கு முகையதீன் காட்சிதருவெழுத்தே.

இதற்குச் சக்கரம்



இதன் பாயிதா

மேற்படி சக்கரத்தை தங்கத் தகட்டிலெழுதி வெள்ளைப் புடவை விரித்து அதின்மேல் தகட்டை வைத்து மல்லிகைப்பூ போட்டு ஊதுவத்தி கொளுத்தி துப்புரவாக குளித்து முழுகி துப்புரவுடனே வந்திருந்து மேற்படி பாட்டை 3320-தரம் படித்து மேற்படி தகட்டை மடித்து வெள்ளித் தாயித்துக்குள் அடைத்து நீங்கள் இடுப்புகளில் போட்டிருந்தால் உங்களுக்குந் தெரியாமல் பின்காட்டி கத்தியால் குத்தினாலுஞ்சரி அல்லது கொம்பினாலடித்தாலுங் கல்லெறிந்தாலும் உங்கள்மேல் படாது கத்தினால் குத்தினாலும் கொம்பினா லடித்தாலும் கல்லினா லெறிந்தாலும் அவர்கள் கை நின்றுவிடும் மறுபடியும் அந்த அடிகளெல்லாம் அவர்களுக்கே படும். 1

## குரு வணக்கம்—அதற்குக் கவி

கருவெழுத்தாகிய ஒன்றுக்குங் காணிக்கை நாலெழுத்து
திருவெழுத் தாகிய திருச்சரம் பன்னிரெவ்வெழுத்தை
குருவெழுத்தான முஹம்மதர் றசூலுல்லாஹி அதுக்குந்துணை
உருவெழுத்தான முகைபதீனென் றட்சரமுள் ளெழுத்தே.

## இதற்குச் சக்கரம்




## இதன் பாயித்ா

சகலமான படைப்புகளுண்டாகு முன்னே தொனியென்ற சத்தம் ஒன்று முழங்கிக்கொண்டிருக்கும் நேரத்தில் அந்தச் சத்தத்தை ரஹ்மான் உறுக்கிப் பார்த்தான் அந்தச் சத்தத்துக்குள்ளிருந்து ஒரு கலம் வெளியானது அந்தக் கலத்தைப்பார்த்து றஹ்மான் றவ்ஹுல் மஹ்பூவ் என்னும் பலகையிலெழுதும்படியாகக் கலத்தைப்பற்றி உறுக்கினன் அந்தக்கலம் எழுதவில்லை மறுபடியும் கலத்தைப் பார்த்து ரஹ்மான் எழுதும்படி உறுக்கினன் அப்பவும் எழுதவில்லை ஏன் எழுதாமலிருந்ததால்' எழுதவில்லை மூன்று தரம் எழுதும்படிக்கு உருக்கியும் எழுதவில்லை. அப்போது ரஹ்மானுக்குக் கோபமுண்டாகி ஹிம என்று உருக்கினன் உடனே அந்தக்கலம் சக்குப்பிளந்து ரஹ்மான் எண்ணிய எண்ணமெல்லாம் ஆதியோடந்தம் வரையில் லவ்ஹுல் மஹ்பூல் என்னும் பல்கையில் எழுதிவிட்டது பிறகு றஹ்மானுக்குச் சந்தோஷமுண்டாகி மஹ்பூல் ஆலம் என்று பேர் கொடுத்தான் அந்தக் கலமானது முகையதீன் ஆண்டவர்களாக இருக்கும் இன்

னும் அறுசு குறுசு சொர்க்கம் நரகம் வானம் பூமி கடல் நதி பாதாளம் இதுகளெல்லாம் ஹிம் என்னப்பட்ட ஒரெழுத்தின் உறுக்குதலினால்தான் நிற்கின்றது இதனால்தான் எல்லா அறுவாஹுகளும் உண்டானது இன்னும் இந்த வெழுத்துக்கு விபரம் சொல்லுகிறோம் அதாவது அல்ஹம்து சூரத்தில் இரண்டிடங்களில் அலைஹிம் என்று சொல்லி வருகிறது அதை நீங்கள் உணர்ந்து பாருங்கள் இன்னும் இந்த எழுத்துக்கு விபரம் சொல்லுகிறோம் அதாவது ஒரு பெரிய பாரமான கல்லைத்தூக்க வேண்டுமானால் ஹிம் என்று உறுக்கித் தூக்கினால்தான் அதைத் தூக்கமுடியும் இன்னும் குளவி தண்ணீர் கரையில் மண்ணெடுத்து விட்டு மரங்களில் கூடுகட்டி ஆவாரச் செடியி லிருக்கப்பட்ட பச்சைப்புழுவைக் கொண்டுவந்து கூட்டுக்குள் வைத்து வாயைமூடி முன்னின்று ஹிம் ஹிம் மென்று ஒரே உருக்குதலாக முப்பத்தொன்பது நாள் உறுக்கி நாற்பதாநாள் மூட்டின் வாயைத் திறக்க மேற்படி புழு முன்னிருந்த ரூபமாறி சிறகு கொடுக்கு முதலியவைகள் அந்தக் குளவியைப் போலுண்டாகி அதனுடன்கூடப் பறந்துவிடுகிறது இது யாவருக்கும் தெரிந்த திருஷ்டாந்தம் இப்படி ஹிம் என்று உறுக்குதலினால்தான் தவத்தைக் காணக்கூடும் ஆகையால் நீங்கள் பூலோகத்திலிருந்து மவுத்தாகி உங்களை கபுறு அறையிலடக்கித் திரும்பி ஏழடி வருவதற்கு முன் ஒரு ஜன்னல் வழியைக் கண்டு நீங்கள் நடந்து போனால் உங்களை முன்சொல்லிய தோட்டத்தில் கொண்டுபோய்விடும் அதில் நீங்கள் போயிருந்து வாசஞ் செய்து மகா மதுரமுள்ள ருசிகளை யருந்தி மரங்களிலே கிடைக்கும் அநேகங்களான கனிவர்க்கங்களால் பசியாறி பாலாறு தேனாறு மதுவாறு தண்ணீர்களையுங் குடித்து மகா சந்தோஷத்துடன் எந்நேரமும் அங்குள்ள வீடுகள்தோறும் இருக்கப்பட்ட அன்ன ஊஞ்சல்களில் இருந்து ஆடிக்கொண்டிருப்பீர்கள் இந்தவழியைப் பெறாதபேர்கள் எப்போதும் நரக வேதனைக்கு ஆளாவார்கள் மேலும் மேற்சொன்ன நல்வழியை யடைந்த பேர்களுக்கு பின்னும் இதற்கு மேலான சுவர்க்கலோகப் பதவியுங் கொடுக்கப்படும்.

அப்போது நீங்கள் ஹவ்வல்கவ்தற் என்கிற ஆற்றுத் தண்ணீரில் மூழ்கி முத்தெலிஹா வென்கிற பட்டுக்களையும் உடுத்தி

சுவர்க்கலோகத்து வாசல் முன்னில் இருக்கப்பட்ட சிதுறத்துல் முந்தஹாவென்கிற மரத்து இலையை நீங்கள் தலையில் கிரீடங்களாகப் போட்டு சுவர்க்க லோகத்து வாகனங்களேறி சுவர்க்கலோகம் புகுதுவீர்கள் நீங்களும் ஹூறுல் ஈன்கப் பெண்களும் சந்தோஷங்களா யிருக்கும்போது உங்கள் உங்கள் பெண்ஜாதிமார்களை றஹ்மான் உங்களிடம் ஜோடி ஜோடிகளாகச் சேர்த்து வைப்பான் அப்போது உங்களுடைய பெண்களை நீங்கள் விரும்பாம லிருப்பீர்கள் அப்போது அந்தப் பெண்கள் ரொம்பவும் அழுது சலித்து றஹ்மானிடத்தில் துஆக் கேட்பார்கள் றஹ்மானே எங்களுக்கு அழகு வடிவு ஒளிவு இல்லையென்று எங்களுடைய புருஷன்மார்கள் எங்களைக் கொஞ்சமாவது விரும்பாமல் எந்நேரமும் அந்த ஹூறுல் ஈன்கப் பெண்கள் கூடச் சந்தோஷங்களாக இருக்கிறார்கள் றஹ்மானே எங்களை இந்த வடிவைவிட்டு நீக்கி ரொம்பவும் அழகு வடிவுகளாகச் செய்ய வேண்டுமென்று துஆக் கேட்பார்கள். உடனே றஹ்மான் அவர்கள் முன்னிருந்த வடிவைவிட்டு நீக்கி சுவர்க்கலோகத்து ஹூறும் ஈன்கப் பெண்களி னின்னம் நூறுபங்கு அதிகமான அழகு சௌந்தரியங்க ளாக்கிவிடுவான் இவர்களை அந்தந்த புருஷன்மார்கள் கண்டவுடனே இவர்கள்மேல் ஆசையாகி இந்தப் பெண்களை ரொம்பவும் சந்தோஷமாக்கி வைத்திருப்பார்கள் இவை கண்டு ஹூறுல் ஈன்கப்பெண்கள் இந்தப் பெண்களுக்குத் தாழ்மையாக நடந்து இவர்கள் சொன்ன பணிவிடைகளைச் செய்து கொண்டிருப்பார்கள்.

திசைக்கட்டு—அதற்குக் கவி

உள்ளேதரித்து உலாவிய அட்சரமாறுயிதழ்
எள்ளளவாகிலும் விலகா திலாமணி யெவ்விடமும்
வள்ளெட் டுத்திக்கும் வளர்பதிறு சோணவாசமிட்டு
பள்ளெட் டுக்கோல முன்கையதீனென் றட்சரக்கொடுகோபமே.

இதற்குச் சக்கரம்




இதன் பாயிதா

புலி கரடி யானே சிங்கம் யாளிகுளிமாடு இன்னும் அனேக துஷ்ட மிருகங்கள் இருக்கும் காடுகளுக்கு நீங்கள் யாராவது போகவேணுமென்றால் வெள்ளைப் புதுவோட்டில் மேற்படி சக்கரத்தை பலகை யெழுதுஞ் சாயங்கொண்டெழுதி இப்படி நாலு வோட்டில் எழுதி ஒவ்வொரு வோட்டிற்கு நாலுதரம் மேற்படி பாட்டைப் படித்து ஊதி காடுகளுக்கு போகும்போது மேற்படி நான்கு ஓட்டை யெடுத்துக்கொண்டு நாலு திக்கிலும் எறிந்தால் யாதொரு மிருகங்கள் கண்ணுக்குத் தெம்படாது காடு கட்டிப் போகும். 18

பிசாசை தாவிக்க—அதற்குக் கவி

கோவிச் சுழிமுனை முச்சுடர் பார்வை கொடுரங்கொண்டு
நாபிக்கு மந்திரம் நகாரமென அதைநம்பி நித்தம்
பாவிக்க வந்த பசாசுகள் தேவுகள் சின்படையும்
தாவிக்க மந்திர முகையதீனென் றட்சரம் பதினெட்டுமே.

இதற்குச் சக்கரம்



## இதன் பாயிதா

பெண்பிள்ளேக்காவது ஆண்பிள்ளேக்காவது துட்டமான பிசாசுகள் பிடித்துயிருந்தால் சக்கரத்தை நெல்லு மாவு ரொட்டியில் பலகை யெழுதுஞ் சாயங்கொண்டெழுதி சாம்பிராணி புகைத்து 123-தரம் மேற்படி பாட்டைப் படித்து அவர்களது தலையைச் சுத்தி வீட்டுக்கப்புறம் கொண்டுபோய் புதைக்கவும் இப்படிக்கு 3-நாள் செய்யவும் எப்பேர்க்கொத்த பிசாசுகளாயிருந்தபோதிலும் தாவித்தடங்கிவிடும். 19

## ரட்டினம்—அதற்குக் கவி

ரட்டின மாகிய கோனை இனித மாறுமிட்டு
மட்டது கச்சற மவ்விட்டு வவ்விட்டு வாசமிட்டு
நட்டது நவ்விட்டு நற்கூறம்போட்டு மணிபூரம் [தே.
பொட்டிட்டிருந்த முகையதீனென் றரைக்குள்ளே பூட்டிய

## இதற்குச் சக்கரம்



## இதன் பாயிதா

வெள்ளைப் புடவை விரித்து மல்லிகைப்பூ நிரப்பி மேற்படி சக்கரத்தை வெள்ளித் தகட்டிலெழுதி வைத்து வூதுவத்தி கொளுத்திவைத்து 303-தரம் படிக்க ஒன்பது ரத்தினுதிகளும் வந்திருக்கும் அதை யெடுத்து பார்க்கலாம் யாதாமொன்றுஞ் செய்யப்படாது. 20

## அரையுட்டு—அதற்குக் கவி

அரைக்குள் ளரைத்து அரனடிம்பாட்டு அகாரமிட்டு
உரைக்கும் நரம்புகள் நாமங்கள் சூட்டிய பத்தட்சரம்
துரைக்க விட்டுணு துளசிப்பூ வாசமுஞ் சூழவிட்டு
முரைக்குஞ் சுவாசமு மாயிர முகையதீனென்ற நாமஞ்சொல்லே.

இதற்குச் சக்கரம்



பெண் மயக்கந் தீர—அதற்குக் கவி

சொல்லுஞ் செயலுங் குருமெய்ச் சீடனுஞ் சொல்படியே
வெல்லு முஹம்மது வேல்விழியால் இருக்கட் டருளிவர்துருகும்
வில்விழிசைகளும் விரிபூசைவேல்களுங் கொடுத்தவனை
கொல்லு முகையதீனென் றட்சரக் கூர்மையின் சக்கரத்தால்.

இதற்குச் சக்கரம்



இதன் பாயிதா

மேற்படி சக்கரத்தை தாம்பிரத் தகட்டிலெழுதி சந்தனம் கரைத்து தரையில் தெளித்து அதின்பேரில் தகட்டை வைத்து ஊதுவத்தி கொளுத்தி மேற்படி பாட்டை 2128-தரம் படிக்க சித்தியாகிவிடும் பின்னுடி தட்டை யெடுத்து பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ளவும் பெண்களுக்கு பிரமை யென்ற கிறுக்குக ளாகி யிருந்தாலும்சரி நினைவு மாறாட்டம் இப்பேர்க்கொத்த இனங்களாக யிருந்தாலும் சரி அவர்களை அப்புறத்தில் மேற்படி சக்கரத்தை பலகை யெழுதுஞ் சாயங்கொண்டு வெள்ளை பிங்கா னில் எழுதி முன்னே வைத்து மேற்படி பாட்டை 21-தரம் படித்து தண்ணீர் விட்டுக் கரைத்து குடிக்க கொடுக்கவும். இங்

தப்படி 11-நாள் கொடுத்தால் ரஹ்மான் கிருபையால் இதுக ளெல்லாம் நீங்கிச் சுகமாகிவிடும். 21

சகலத்துக்கும்—அதற்குக் கவி

சக்கர வட்டமதனில் ஆசன முக்கோணமதில்
உக்கர மட்சரம் பனிரெண்டுக் குள்ளே யெழுதிவைத்து
பக்கம் நிரைத்தும் பரிமளம்பூசிச் செந்தாமரைப்பூ
வக்கநிறைக்கு முகையதீனென் றட்சரமாயிரத் தெட்டெழுத்தே.

இதற்குச் சக்கரம்



கடல் போங்குகிறதை அடக்க—அதற்குக் கவி

ஆயிரத் தெட்டுயிதழும் விரிந்து அலங்கரித்து
பாயிரமிட்டு இதம்பறலாறு பொங்கியபார் நதிக்கும்
காயிரமிட்டு இச்சையில் நாமக் கருவெழுத்து
வாயிர முன்னுக்குள் முகையதீ னென்றட்சா வாசியிலே.

இதற்குச் சக்கரம்



உயிரெழுப்ப—அதற்குக் கவி

வாசியெழுப்பியிரண் டாயிரங்குரு நாமஞ்சொல்லி
பூசித்திருந்து வகாரத்தை விட்டுசீவனுக்கும்
நாசிக்கும் நாவுக்கும் நடுச்செவிதான கண்ணுடிக்குள்ளே
ஆசித்திருக்கு முகையதீனென் றட்சரக் கூர்கனேயே.

இதற்குச் சக்கரம்



இதன் பாயிதா

மேற்படி சக்கரத்தை தாம்பரத் தகட்டி லெழுதி வெள்ளைப் புடவை விரித்து அதின்மேல் வைத்து வெள்ளைப்புடவை மேற் கட்டுக்கட்டி நீங்கள் குளித்து முழுகி துப்புரவாக வந்திருந்து ஊதுவத்தி கொளுத்தி லாஇலாக இல்லல்லாகு முகம்மதுர் றசூலுல்லாகி யென்று 1100-தரம் வோதி பின்னால் மேற்படிபாட்டை 780-தரம் படித்து இம் இம்மென்று 2000-தரம் சொல்லி இது கள் படித்து முடிந்த பின்னால் தகட்டையெடுத்து கையில் வைத் துக் கொண்டு பழய கபுறுகளில் போய் நின்று பாட்டை ஒரு தரம் படிக்க தன் சுரூபத்துடனே யெழுந்து வருவார்கள் மூனே முக்கால் நாழிகைநின்று பேசலாம் பின்பு போய்விடுவார்கள்.

கணையாழி—அதற்குக் கவி

கணையாழிவட்டங் கருவான சூட்சங் சருவெழுத்து
இணையான மந்திரம் வேறொன்றில்லாத விரிமந்திரம்
அணைவான பிச்சி மணம்பூத்தவாசி மலர்க்கொடிக்கி
குணமான வள்ளல் ரகுபான முகையதீன் குணபதியே,

இதற்குச் சக்கரம்



பரிமளாதி—அதற்குக் கவி

குணபதி யானந்தக் கோமளாகிய கொவ்வைக்கனி
மணபதி வாசமகிழ்ந்த வடமேகும் யிருப்பிடங்கள்
தணபதி வட்டமயிரா ரிதழட்டு திருச்சவ்விட்டு
கிணபதி முத்து முகைபதீன் றிருமணி மாணிக்கமே.

இதற்குச் சக்கரம்



இரத்தினம் வரவழைக்க—அதற்குக் கவி

மாணிக்க முத்து மரகதப்பச்சை பொட்டிட்டவளே
பாணக்கை கொண்டு பதஞ்சிரம் போற்றி பணிந்துகையால்
பேணிக் கைகொண்டு பேருமன்பத்தோ ரட்சரப்பெண்மயிலே
காணிக்கவேணு முகையதீனென்ற திருக்காட்சியிலே.

இதற்குச் சக்கரம்



இதன் பாயிதா

மேற்படி சக்கரத்தை கடிதாசியிலெழுதி முன்னேவைத்து குளித்துமுழுகி ஊதுவத்தி கொளுத்தி வைத்து துப்புரவாக யிருந்து 7002-தரம் படிக்க வயிரம் செகப்பு பச்சை நீலம் மாணிக்கம் நாகரத்தினம் சிவரத்தினம் கோமேதகம் புஷ்பராகம் இப்பேர்க்கொத்த கல்லுகளெல்லாம் மாம்பழம் எலுமிச்சம் பழம் அளவு பிரகாம் முன்னே வந்திருக்கும் அதை யெடுத்துப் பார்க்கலாம் வீட்டில் வைக்கலாம் விற்கவேணுமென்று நாடினால் காணுமல் போய்விடும் யாருக்குங் காண்பிக்கலாம்.

எதிரி அச்சம்—அதற்குக் கவி

காட்சிக் கமலக்கருவான பேரும்நாள் கண்டறிய
வாச்சமனது வாடாமல் சுகித்து உங்கள் வாசகத்தை
பேசப்பிலன் வரபேரைக் குருவெழுத் தஞ்சுதர
வாச்சு முகையதீன்றிரு முத்திரிகை வான்பொருளே.

இதற்குச் சக்கரம்




ஐந்துவகைப் புட்பம் வரவழைக்க—அதற்குக் கவி

வான்பொருளென்று வடிவஞ்சுவண்ண நிறந்தனிலே
கோனென்றுமுதல் குருபதினறுண்டு கூர்மையினல்
நானென்ற சொல்லில் நடுவென்ற அட்சரம் வந்துதர
தானென்ற முகையதீன் கடாட்சந் தருங்குணமே.

இதற்குச் சக்கரம்



இதன் பாயிதா

மேற்படி சக்கரத்தை வெள்ளித் தகட்டி லெழுதி தரையை சந்தனங் கொண்டு மெழுகி அதின்மேல் வெள்ளைப் புடவை விரித்து பன்னீர் தெளித்து பாணக்கம் வைத்து ஊதுவத்தி வைதது நீங்கள் துப்புரவாக குளித்துமுழுகி நல்ல உடுப்புகள் உடுத்தி மேற்படி பாட்டை 5600-தரம் படிக்க முடிவில் 5-வகை

புட்பம் பச்சை நீலம் சிகப்பு மஞ்சள் காங்கு இப்போர்க்கொத்த வர்ணங்களுள்ளதாயும் பூலோகத்தி லில்லாததாயு மிருக்கும் ஒவ்வொரு பூக்களுடைய அழகு ரொப்பவும் வடிவமாகவிருக்கும். அதினுடைய பெருக்கமோ தேங்காய்போல் இருக்கும் அதினுடைய வாசனைகளோ அபுரூபமாயிருக்கும் அதை பெட்டியில் வைத்தால் வீடு முழுவதும் ஒரே வாசனையாக யிருக்கும் பின்னல் நீங்கள் எங்கேயிருந்தாவது ஒரு பூவைநாடி ஒருதரம் பாட்டைப்படித்து கையேந்தினுல் கையில் வந்திருக்கும் யாவருக்குங் கொடுக்கலாம்.

பகலிரவு—அதற்குக் கவி

தருகுணம்பத்து இருதய கமலத்திலீசனடி
வருமிரவும்பகலும் மற்றவிடத்தி விடவெகுநதிக்கும்
பருகுமமுது அன்பத்தோ ரட்சரமஞ் செழுத்தானகனி
குருகினின்றாடு முகையதீ னென்றட்சரக் குலக்கொழுந்தே.

இதற்குச் சக்கரம்



வினைதீர மன்றுட்டம்—அதற்குக் கவி

குலக்கொழுந்தண்ணல் குருநிறம் வண்ணமெனக்குத்தந்து
குலமதிசொல்லி யெனக்குபதேசித்த சற்குருவே
தலநிலநானிலு பஞ்சுடுநிலந்தனிலுங் கபுர்தனிலும்
வல்வினை தீர்த்தருள் முகையதீன் அப்துல் காதர்நாயகமே.

இதற்குச் சக்கரம்



### இதன் பாயிதா

யாருக்காவது கைபிடித்த இனங்களால் தெரிந்துகொள்ளாத வியாதிகளா யிருந்தாலும் பலகை யெழுதும் சாயங்கொண்டு வெள்ளைப் பீங்கானில் மேற்படி சக்கரத்தை யெழுதி சாம்பிராணி புகைத்து பாட்டை 21-தரம் படித்து பீங்கானில் வூதி தண்ணீரை வூத்தி கரைத்து மேற்படி பாட்டை 6 தரம் படித்து வூதி மேற்படி, தண்ணீரை அவர்களுக்கு குடிக்கக் கொடுக்கவும் இந்தபடிக்கு 21 நாளுக்குக் கொடுக்கவும றஹ்மான் கிருபையால் எப்பேர்க்கொத்த வினைகளா யிருந்தாலும் தீர்ந்து சுகமாக விருப்பார்கள்.

### உயிர் எழுப்ப—அதற்குக் கவி

கொழுந்தென்ற பச்சை குலமறியாதவர் கோலமதை
அழிந்துஞ் சுவாசமறுபத்து நாலையும் மஞ்சரைக்குள்
விழுந்து விரைபத்தி யெழுபத்து மூன்றுநாடியும் விண்புகுந்து
அழிந்துயர் மாண்டிட அருள்கொடுத்தார் முகையதீ னஞ்சுழியே.

### இதற்குச் சக்கரம்



### இதன் பாயிதா

ஒரு யெகூதியினுடைய பெண்ஜாதிக்கு வெகுகாலமாக பிள்ளையில்லாம லிருந்தமையால் நாயகம் ஹதீது சொல்லிக் கொண்டிருக்கும் நேரத்தில் அந்தப் பெண்பிள்ளை ரொம்பவும் வணக்க வொழுக்கமாக வந்து நின்று நாயகமே யெனக்கு பிள்ளை இல்லையென்று சொன்னாள் நாயகமவர்கள் அந்தப் பெண் பிள்ளையைப் பார்த்து ஒ பெண்பிள்ளையே நீ ஒரு ஆண்பிள்ளை பெறுவா

யென்று சொன்னார்கள் மேற்படி பெண்பிள்ளை வீட்டிற்குப் போகவும் இறந்துவிட்டாள் மேற்படி நாயகம் சொன்ன சங்கதி பெண்ணுடைய புருஷனுக்கு தெரியும் அவன் பெண் பிள்ளையை யெடுத்து அடக்கஞ்செய்து வீட்டில் வந்து ரொம்பவும் விசாரமாக விருந்தான் அப்படியிருக்கு நேரத்தில் இவன் இனத்தார்கள் சிலர் வந்து அவனுக்கு ஆறுதலையான புத்தி சொன்னார்கள் அப்போதவன் சொன்னது நேற்றையதினம் முகையித்தீனுண்டவர்கள் என் பெண்சாதிக்கு நீ ஆண்பிள்ளை பெறுவாயென்று உத்திரவு சொன்னார்களாம் அப்படிக்கிருக்க இன்றைக்கு யிறந்து போய் விட்டாளென்று சொன்னான் அதிலிருந்த சிலபேர்கள் சொன்னதாவது என்ன உத்தரவு யெங்கே பிள்ளை பெற்றாள் யிறந்துபோய் விட்டாளேயென்று கேவலமாகப் பேசிக்கொண்டிருக்கிற நேரத்தில் நாயகமவர்கள் சீஷராகிய பக்கீர் ஒருவர் அந்த பாதையாக வந்தார்கள் இந்த விசனங்களெல்லாம் அவர் நின்று சிலநேரங் கேட்டு நாயகமவர்களிடத்தில் சொன்னார்கள் நாயகம் இச் சேதியைக் கேள்விப்பட்டு ரொம்பவும் கோபத்துடனே யெழுந்து எகூதியுடைய வீட்டில் வந்து அவனைக் கூட்டிக்கொண்டுபோய் உன் பெண்சாதியை யெந்த இடத்தில் அடக்கஞ் செய்திருக்கின்றது காண்பியென்று கேட்டார்கள். அவன் இதுதானென்று காண்பித்தான் நாயகம் சொன்னதாவது ஓ பெண் பிள்ளையே யெழுந்திருந்து வாவென்று சொன்னார்கள். மேற்படி பெண் முன்னிருந்த ரூபத்தைவிட அதிக சௌந்தரியமாக எழுந்துவந்து இவர்கள் எதிரில் நின்றாள் இவர்கள் சொன்னதாவது ஓ பெண்பிள்ளையே உனக்கு முன் சொன்னது ஒரு ஆண்பிள்ளை பிறக்குமென்று சொன்னே னல்லவா இப்போது வீட்டுக்குப்போ உனக்கு 7-பிள்ளைகள் பிறக்கும் அதன் பிறகு மவுத்தாவாயென்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள் அதே பிரகாரம் அவள் 7-பிள்ளைபெற்று மவுத்தாய்விட்டாள் இப்படிக்கு அருள்கொடுத்த குதுபு நாயகங்களாயிருக்கும் யெல்லா காரியங்களுக்கும் குத்து சமுயித்தீனென்னப் பட்டவர்களால் நடக்கும்.

புலி வாயை கட்டுகிறதும் யானையைப் பிடிக்கிறதும்
அதற்குக் கவி

*அருஞ்சுழி யெட்டுந் திசையெட்டும் நின்ற அருநாகம்*
*வருகட்டுயானை புலிகடுவாய் சிங்கம் யாளியையும்*
*மிருகத்தின் முன்முனைப் பாச்சல்முகமுந் தலைதிருப்பி*
*தருகக்கருவையு முகையதீனென் றட்சரந் தைத்ததுவே.*

இதற்குச் சக்கரம்



இதன் பாயிதா

மேற்படி சக்கரத்தை வெள்ளித் தகட்டிலெழுதி நீங்கள் குளித்து வெள்ளைப் புடவை உடுத்தி தலையிலும் வெள்ளைப் புடவை கட்டி துப்புரவான விரிப்புகள் விரித்து அதில் சந்தனங் கரைத்து தெளித்து ஊதுவத்தி அல்லது சாம்பிராணி புகைத்து தகட்டை முன்னேவைத்து மேற்படி பாட்டை 1128-தரம் படித்து முடிந்தபின் தகட்டை யெடுத்து சுருட்டி வெள்ளித் தாயித்துக்குள் அடைத்து பத்திரப்படுத்தி வைக்கவும் பின்னுடி நீங்கள் சிங்கமிருக்குங் காடு புலியிருக்குங் காடு கரடிகள் யிருக்குங் காடு குளிமாடுக ளிருக்குங்காடு இந்த மிருகசாதிக ளிருக்கப் பட்ட காடுகளுக்குப் போய் யானை பிடிக்கவேணு மென்றால் நீங்கள் யெத்தனை பேர்கள் ஒன்றாகப் போரீர்களோ ஒவ்வோர் பேர்களுக்கு ஒவ்வோர் சக்கரம் தாயித்துக்குள் அடக்கஞ்செய்து வைத்துக்கொள்ள வேண்டியது நீங்கள் யானை பிடிக்கப்போகும் நேரத்தில் அர்த்தராத்திரி காலங்களில் நீங்கள் செய்யவேண்டிய வகைகளாவது மணங்களான சோறுகள் மாமிச மில்லாமலாக்கி வாழைப்பழம் சர்க்கரை இதுகள் வைத்து முகியித்தீனாண்டவர் பேருக்கு பாத்திகாவோதி சோறும் வாழைப்பழமும் சர்க்கரையும்

பங்கிட்டு நீங்கள் யானை பிடிக்குங் கயிறுகளையும் வடங்களையும் எடுத்துக்கொண்டு ஒரு தண்ணீர் தாவளம் பார்த்து அந்த இடத்தில் நீங்கள் இருந்து சாம்பிராணி புகைத்து மேற்படி பாட்டை 20 தரம் படிக்க எந்தக் காடுகளி லிருந்தாலும் நீங்கள் இருக்கப்பட்ட இடங்களுக்கு யானையும் அதுகளுடைய குட்டிகளையும் கூட்டிக்கொண்டு உங்களைச் சுத்தி சுத்தி அதுகள் வந்து வந்து நிற்கும் அப்போது நீங்கள் வெள்ளித் தாயித்தை யெடுத்து யாமுயித்தீனென்று சொல்லி இடுப்பில் போட்டுக்கொண்டு கயிறுகளையும் வடங்களையும் யெடுத்து யாகிமுஹ்யித்தீனென்று சொல்லி பயப்படாமல் அஞ்சாமல் ஒரே உறுதியாக ஓடிப்போய் விரட்டினல் அதுகள் காலெழுந்து நடக்க வொட்டாமல் தள்ளாடித் தள்ளாடி வோடும் நீங்கள் கயிற்றை வீசினல் கயிறு தப்பாமல் அதினுடைய காலில் விழுந்து சுருக்கிவிடும் அதுகள் உங்களை ஒன்றுஞ் செய்ய முடியாது அதுகள் விடுவிடென்று ஆடிக்கொண்டு நிற்கும் அப்போது நீங்கள் அதுகளை ஒரு சிறு மரங்களில் கட்டிவிட்டு நிற்க நாலைந்துநாள் சென்று முஹ்றயித்தீனுண்டவர்களுக்கு பாத்திஹாவோதி சக்கரை பகுந்து மேற்படி யானையைப் பிடித்துக் கொண்டு வீட்டுக்கு வந்தால் சும்மா வந்துவிடும் இதற்கு இடையில் உங்களை யானை பிடிக்கிற நேரத்தில் யாராவது தடுத்தால் அந்தத் தடுப்புகளும் மாந்தரீகங்களும் உங்களுக்கு அணுவு பிரமாணமாவது சேரமாட்டாது யானை பிடிக்கப்போகும் நேரத்தில் அந்த விபரப்படி செய்து கொண்டு போகவும்.

## சூனியம் விலக—அதற்குக் கவி

தச்சதுவாக்கிய சத்துருசூனியந் தானறுத்து
நச்சதுவாக்கிட நடத்திியே கோவருள் நாமங்கொண்டே
முச்சதுவாகி மூன்றெழுத் தட்சர வான்மையென்னை
வச்சுருவாக்கு முகையதீனென்றட்சர வாய்மைகொண்டே.

இதற்குச் சக்கரம்




இதன் பாயிதா

ஒருவருக்கு வஞ்சனை சூனியங்களாக யிருந்தால் புது கல்யத்தில் தண்ணீர்வூற்றி கண்ணால் சக்கரத்தை யெழுதி 21-தரம் படித்து தண்ணீரை குடிக்க கொடுக்கவும் இந்தப்படிக்கு 40-நாள் செய்யவும் றஹ்மான் கிருபையால் தீர்ந்துவிடும்.

ஞானமுணர்க—அதற்குக் கவி

கொண்டேகருணை கேவருள் பூட்டிய கோவரையின்
பண்டேஉதித்த பகர்முறைஞானக் கருவெழுத்தை
விண்டேயெனக்கு யென் தருவித்தை யிசைத்துவைத்தார்
நன்றேமுகையதீ னென்றீ நடுவனை முத்திரையே.

இதற்குச் சக்கரம்




பில்லி வஞ்சனை சூனியம் விலக—அதற்குக் கவி

முத்திரையானது மூவுலகெங்கு முழங்கிவந்த
பத்திரையான முஹம்மதுபாதம் பணிநெஞ்சமே
சத்துருவஞ்சனை சூனியம்தன்னைத் தரித்தறுத்து [மே.
பத்திரையாயென்னை வைத்தாளுமுகையதீனென்ற பூராபர

### இதற்குச் சக்கரம்



மேற்படி சக்கரத்தை தாம்பிரத் தகட்டிலெழுதி சாம்பிராணி புகைத்து துப்புரவாகயிருந்து 2120-தரம் படிக்க சித்தியாகிவிடும். பின் யாருக்காவது பேய்கள் பிசாசுகள் வஞ்சனை பில்லி சூனியம் ஏவல் இப்பேர்க்கொடுத்த மாதிரிகளாக யிருந்தால் அவர்களை முன்னே வைத்து சாம்பிராணி புகைத்து மேற்படி பாட்டை படிக்க எப்பேர்க்கொடுத்த பேய்களெல்லாமாடும் வஞ்சனை பில்லி சூனியங்களெல்லாம் தெறித்துவிடும்.

### பூட்டு முறிய—அதற்குக் கவி

பரமென்றுவுன்னை பணிவிடைகொண்டு பாதவித்து
வரமென்றுவந்துன் றீங்காரப்பூட்டை யிகாரமிட்டு
உறமெட்டிநின்ற ஓங்காரத்துள்ளே உலாவியகுண்டலியை
தற்காட்டவேணு முகையதீன்சாகிபு சாக்கட்டிலே.

### இதற்குச் சக்கரம்



### நகை கழட்ட—அதற்குக் கவி

சரக்கட்டிதழிட்டு மணிமந்திரமாலை பதக்கமிட்டு
பாவைத்திருந்த பளிங்குமாமணிமண்ட பச்சரைக்குள்
தரப்வைத்தடைத்து கணையாசனத்தில் ஏகாரமிட்டு
துரவாசிகொண்ள முகையதீன்சாகிபு துளக்கருத்தே.

இதற்குச் சக்கரம்



கண்ணுடி பார்க்க—அதற்குக் கவி

கருவென்றுரைத்த பளிங்குகண்ணுடியின் காதல்வைத்து
உருக்கண்டுசிந்தை உலாவியகூட்டத்தி லுள்ளிருந்த
மருவந்துஊரி மலங்காமலுண்டிருந் துன்மலரை
குருவென்றுதெரிசித்தே மூகையதீன்குத்தூசு மணிவிளக்கே.

இதற்குச் சக்கரம்



நெருப்பு கொளுத்த—அதற்குக் கவி

விழிக்காமொழிவை விரந்தேதத்தியெங்கும் விரித்துவைத்த
துலுக்கானசரிகைக் கிரிகையுடன்மோகமுந் தேர்ந்துகணி
பழக்கானகெவுன பராபரனேபார்வை மனோமணிக்கண்
முளிப்பாட்டக்காட்டு மூகையதீன்சாகிபு முன்னிலேயே.

இதற்குச் சக்கரம்



வில் முறிய—அதற்குக் கவி

நிலையெட்டுத்திக்குத் திசைநாலுஈரெட்டுக் கோனுக்குமேல்
வலையெட்டிவைத்த மனோமணிநாசி நுணிநடுவில்
சிலையெட்டிவைத்து வீதிசிகாரமன்பத்தோரட்சரக் கூர்க்கணையில்
கலைவைத்துவீசக் கலாபிக்குமுகையதீன்கருணை கடாட்சியமே.

இதற்குச் சக்கரம்



செய்தவினை தீர—இதற்குக் கவி

கடாட்சரங்கருணைக் கல்லாகிபூத்தேவு பசாசுகளை
கொடாகுகொண்டு சததுரைச் செய்வினையும்
சடாமல்வல்வினை சூனியமுந்தேகக் கொடுவினையும்
கூடாமல்துரத்திவைத்தார் முகையதீன் சோதிதிருவுளமே.

இதற்குச் சக்கரம்




மாத்தான்வணங்க—இதற்குக் கவி

திருவுளமுத்திதரு மந்திரமானதை வாசத்துள்ளே
வுருமைக்கருவெழுத்தான உபாயத்தை உச்சரித்து
கருமைக்கூரட்சரம் நாந்தாரியிட்டுக் கருவெழுத்தை
உருமைக்குமுகைபதீ னென்றட்சரக் கெவுரிசியே.

இதற்குச் சக்கரம்



தகுத்தர் ஜெயிலானி—அதற்குக் கவி

விருத்தம்

கதிரவன் உதிக்கும்வெல்கை கன்மலா தனியே யேகி
தனியவன் கிருபையாலே தானவனருளைப் பெற்று
புவிதனில் வொலிமார்க் கெல்லாம் நாயகக் குருவாய்வந்த
பனிரண்டு வருஷ நோன்பாய் பண்பதா யிருந்தகோவே.

இதன் பாயிதா

ஆதம் அலைகிஸ்லாத்தை அல்லாகுத்த ஆலா சொர்க்க லோகத்தை விட்டும் அவர்களை யெடுத்து எறியப்படும்போது அவர்களுடைய பாதம் மலையில் பச்சை மரகதக் கல்லில் வைக்கப்பட்டது அவர்கள் வைத்த பாதம் பச்சை மரகதக்கல் மறைந்து மறவாகி விட்டது முகியித்தீன் அப்துல்காதிர் ஜெயிலானி நாயகப்பொருள் குருவானவர்கள் ஆதம் அலைகிஸ்ஸலாம் மலையில் ஜாரத்துச்செய்து தகுத்தர்ஜெயிலானி மலைக்குவந்து அந்த யிடத்தில் பனிரெண்டுவருஷ நோன்பாக யிருந்து தவங்கள் பெற்று அவுலியா அக்தாபு இவர்களுக்கெல்லாம் ராஜநாயகமாக அல்லாகுத்தஆலா திருநாமமுண்டாக்கி முகையதீன் அப்துல்காதிர் ஜெயிலானியென்று பேரும்பெற்று அந்தமலையில் அல் அல்லாகு சுபுகானஹூத்த ஆலாவுடைய குதறத்தால் அங்கே வழியுண்டாகி அதுக்குள் அவர்கள் நடந்து அல்லாகுத்த ஆலாவுடைய அறுசில் நவமணியென்ற தொட்டிலில் போய் படுத்து துயில்புரிந்துக் கொண்டிருந்தார்கள் பின்னும் பூலோகத்துக்குவந்து சில பிரசங்கமான காரணங்களை காண்பிப்பார்கள் யேனென்றால் பூலோகம் சரகுயென்னப்பட்ட மறைப்புகளுக்காக

பகுதாதில் அடக்கமானார்கள் தகுத்தர் ஜெயிலானிமலை சுரங்க வழியிலிருக்கப்பட்ட காட்சியானது நீங்கள் யாராவது அங்கே போகவேண்டுமானால் மண்ணாசை பொண்ணாசை பொருளாசை இந்த மூன்று ஆசாபாசங்களும் நீங்கள் கொஞ்சமாவதுயெண்ணாமல் நம்மள் தவத்தைப் பெறுகிறதற்கு வேண்டியது அந்த முகையதீன் அப்துல் காதிர் செயிலானி அவர்கள் பாதம் காணவேணுமென்று உரே உறுதியாக அங்கேபோய் பார்த்தால் மலைவளர்ந்து நாகப்படம்போல் வளைந்திருக்கும் அந்த மலையினடுவில் முகைதீனப்துல்காதர் ஜெயிலானிநாயகங்களென் றெழுதியிருக்கும் அதற்குகீழ் நீங்களிருந்து நாற்பது நாளைக்கி நோன்பாகயிருந்து ஐந்து வகுத்தும் விடாமற்றொழுது ஒவ்வொரு நேரங்களுக்கு லாயிலாகயில்லல்லாகு முகம்மதுர்றசூலுல்லாதியென்று நூறும் பலவாத்து நூறும் பாட்டு 25 தரமும் இந்த விபரப்படிக்கி நீங்கள் செய்துக்கொண்டு வந்தால் அந்த சுரங்கத்துக்குள்ளிருந்து ஒரு பக்கீர்கள் வருவார்கள் அவர்களைக் கண்டவுடனே நீங்கள் சலாஞ் சொல்லவும் அவர்கள் உங்களை கூட்டிக்கொண்டு போவார்கள் அங்கே உள்ளேபோனால் கொஞ்சம் தலைக்கி குனிந்துகொண்டு போகவேணும் இருட்டான வழியாயிருக்கும் அங்கே பார்த்தால் ஒரு வெளிச்சந்தோன்றும் வெளிச்சங்கண்டு அப்புறம் போனால் இரண்டுமலைக்கு இடையில் ஒரு ஆள் போகும்படியான வழி தோணப்படும் அந்த வழியில் நடக்கும்பாதையில் கீழே மரம் போட்டிருக்கும் அதன்மேல் நடக்கும்பாதையில் பாலங் கிடுகிடென் றசையும் ரொம்பவும் இருட்டான வழிகளாகயிருக்கும் அப்படிக்கு கொஞ்சம் நேரம் நடந்து போனால் ஒருவெளி அகலமாகத் தோன்றும் அந்தவேளையில் ரொம்பவும் அகோரமான காற்றுகள் வீசியடிக்கும் அதற்கப்புறம் போனால் கிணறொன்றிருக்கும் அந்தக் கிணற்றை உற்றுப்பார்த்தால் ஒரே விருளாக விருக்கும் கிணற்றுக்குள் இருந்து சுழல் காற்று அகோரமாகவீசும் பூலோகத்தில் ஆசைவைத்த பேர்களாயிருந்தால் அவர்களுக்கு அந்தக் கிணறுமட்டுந்தா னெத்தப்படும் அவர்கள் அந்தக் கிணற்றைக் கண்டவுடனே அதினுடைய இருட்டையும் ஆழத்தையும் காற்றுசுழலையுங் கண்டு பயந்து திரும்பிவந்து விடுவார்கள் பூலோகத்து ஆசாபாசங்களை வெறுத்து இருக்கப்பட்டபேர்களானால் பிஸ்மில்லா ஹிர்றஹமா

ணிர்றஹீம் என்று சொல்லி அந்தக்கிணற்றி லிறங்கினால் கால் தரையிலேதா னிருக்கும் கீழே நுழைந்து பார்த்தால் ஒருசுரங்க வழி தோன்றப்படும் அந்த வழிக்கப்புறம் கல்லினாலேயும் வெள்ளி யினால் போட்ட கதவுமாயிருக்கும் அதற்கப்புறம் போனால் ஒரு மணமுள்ள காற்று ஒன்றுவரும் அதற்கப்புறம் ஒரு நாற்காலி பச்சைமரகத கல்லினால் ஆறுமுழ நிகளமும் மூன்றரைமுழம் அகலமும் காலுநாலு வயிரமும் அதில் பஞ்சணைமெத்தை விரித் திருக்கும் அதில் அப்துல்காதர் ஜெயிலானி படுத்து துயில் புரிந்த லக்காயிருக்கும் அதுக்கப்புல்ம் போனால் ரொம்பவும் கூர்மையுள்ள வாள் இரண்டு வீசிக்கொண்டேயிருக்கும் அதற் கப்புறம் போனால் புலி ஒன்று படுத்திருக்கும் அதற்கப்புறம் ஒரு வெளி தோன்றும் அந்த வெளியில் ஒரு பள்ளிவாசலொன்று யிருக்கும் அந்தப் பள்ளிவாசல் ரொம்பவும் அழகும் வடிவும் உள்ளதாக விருக்கும் அந்தப் பள்ளிவாசலைச் சுற்றி பூங்கா வனங்களான தோட்டங்களாகவிருக்கும் அதில் மாதுளங்கனிக ளதிகமாக விருக்கும் நீங்கள் பள்ளிவாசல் முன்னில் இருக்கப் பட்ட அவுலில் வொலுச்செய்து சுன்னத்து இரண்டுறக் ஆத்து தொழுது பின் உங்களுக்கு பசியாற மாதுளங் கனிகளைப் பிடுங் கித் தின்னவு மின்னும் அந்தப் பள்ளியிலிருந்து ஐந்துநேரமும் ஒருத்து விடாமற் றொழுதுவரிவும் வெள்ளிக்கிழமை இராத்திரி காலங்களில் அந்தப் பள்ளிவாசலுக்கு அவுலியாபியா அன்பியா ஒலிமார்கள் இவர்கள் வந்து அந்த பள்ளிவாசலில் தொழுகிற து உங்களுக்கு இருக்க இடமில்லாமலிருக்கும் அப்படிக்கு கணக் கிலடங்காத பேர்களாக வெள்ளிக்கிழமையில் அந்த பள்ளி வாச லுக்குதொழுக வருவார்கள் இன்னும் அந்ததோட்டத்திலிருந்து 3-வழி தோற்றப்படும் ஒரு வழி சுவர்க்கலோகத்துக்குப் போகிற வழி ஒருவழி மக்கத்துக்குப் போகிறவழி இன்னுமொருவ்ழி நரகத்துக்குப் போகிற வழியாயிருக்கும் நீங்கள் கொஞ்ச நாளைக்கு அங்கே யிருந்தால் நம்மள் குருநாயகம் அவர்கள் உங் களுக்கு காட்சி கொடுப்பார்கள் உங்களைப் போகும்படி உத்திர வாகிவிடும் நீங்கள் அப்போதையில் மக்கத்துக்குப்போக நாடி நடந்தால் கொஞ்சநேரத்திற்குள்ளாக மக்கத்துக்குப் போய்ச் சேர்வீர்கள் இன்னும் நீங்கள் இருக்கும்படியான வூர்களுக்கு நாடி நடந்தால் கொஞ்சநேரத்திற் குள்ளாக வந்துவிடுவீர்கள் இந்த குதறத்துகளெல்லா மறைந்துவிடும்.

இதிற் சில பாட்டுகளுக்கு விபரம் போடாமலிருக்கிற பாட்டுகளை நீங்கள் துப்புரவாகயிருந்து ஊதுவத்தி கொளுத்தி 1138-தரம் படிக்க சித்தியாகி விடும் ஒவ்வொரு வேலைகளுக்கும் உதவும் நீங்கள் அந்தத்த விவரப்படி செய்யலாம் எல்லாத்துக்கும் முகியித்தீஞண்டவர்கள் அருள்செய்வார்கள் உங்களுக்குக் காட்சிகள் கொடுத்து அனேகம் பதவிகளையும் அவர்களால் பெற்றுக் கொள்வீர்கள் முகியித்தி ஞண்டவர்களால் தாம் எல்லாப் பதவியும் அடையவேண்டியது ஏதேதுகளை நினைத்து தெண்டித்து வருவீர்களோ அந்த முகியித்தீஞண்ட குருவைகாணலாம் எல்லாக் காட்சிகளும் அவர்களால் நடக்கவேண்டியது அனேகங் காவியங்களிற் சொல்லி வருகிறது அவர்களுடைய அரூப சுரூபங்களைக் காணக்கூடாது இந்த வழிகளால் அவர்களுடைய காட்சியை பெற்றுக் கொள்ளலாம் எல்லாத்துக்கும் அவர்கள் தான மற்ற அவுலியாக்களுக் கெல்லாம் அவருடைய பாதம் பட்டால் மாத்திரந்தான் அவுலியாப் பட்டங்கிடைக்கும் அப்போர்க் கொத்த நாயங்களாக யிருக்கும்.

## முஹ்றயித்தீஞண்டகையவர் சத்துரு சங்காரம்

முற்றிற்று.

---

பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்

இஃது

# ஞான சொர்க்கபதி

அல்லாசுபுகான குத்தஆலா நம்மள் நபிநாயகம் முஸ்தபா றசூல் சல்லல்லாகு அலைகிவசல்லம் அவர்களை பூலோகத்திற்கு அனுப்பி அவர்களுக்கு வழிபட்டு கலிமாச்சொல்லி யீமான் கொண்ட பேர்களுக்கு சொர்க்கபதவி கொடுப்பேனென்றும் அவர்களுக்கு வழிபடாமல் கலிமாச்சொல்லி யீமான்கொள்ளாத பேர்களுங்கு நரக வேதனைகளைக் கொடுப்பேனென்றும் திருவுளமாயிருக்கிறான். அந்தக் கலிமாவாகிறது லாயிலாஹ இல்லல்லாஹங் முஹம்மதுர் றசூலுல்லாஹி யென்னும் கலிமாவாகவிருக்கும் இந்தக் கலிமாத்தான் நம்மள் எல்லோர்களையும் சுவர்க்கப்பதிக்கு வழிகாட்டிவைக்கும்.

விருத்தம்

காண்பது அழிந்துபோகும் காயமு மழிந்துப்போகும்
உண்பது மழிந்துபோகும் உலகமு மழிந்துபோகும்
வீண்பகல் போக்காநெஞ்சே மேலவ னருளைப்பெற்றால்
நவமணியுடைய சொர்க்கம் நன்குடை யருளுவானே.

நீங்கள் கண்ணால் காணப்பட்ட வஸ்துக்கள் அழிந்துவிடும் உங்களுடைய காயமு மழிந்துவிடும் நீங்கள் பதினெட்டுநாள் பாகத்துடனே அருந்திய உணவுகளும் அழிந்துவிடும் யெப்பவும் அழியாத வஸ்தாகிறது அந்த அல்லாஹுசுபு ஹானஹுத்த ஆலா ஒருவனாகயிருக்கும் அந்த அழியாத வஸ்துவை நீங்கள் தேடி அருள்களைத் தெண்டித்து பெத்துக்கொள்ளவேண்டியது அவனுடைய அருள்களைத் தெண்டித்து பெற்றுக்கொள்ளாத பேர்கள் நரகம் யென்னப்பட்ட வீட்டைக் காணப்படுவார்கள் அவனுடைய அருளென்னப்பட்ட அமலாகிறது முதலாவது தொழுகையாயிருக்கும் யாதாமொருவன் தொகையைவிட்டுயிருந்தானாகி லவன் இகலாத்தைவிட்டும் விலகினவனாக இருப்பான்.

இன்னும் நம்பள் நபிநாயகத்திற்கு மாறுசெய்தவனாகயிருப்பான் இன்னும் அவன் மூதேவியாகி இபுலீசுமக்களாகிப் போய்விடுவான் அவனை மாறு சாதியென்றும் சொல்லப்படும் யாதா

மொருவர் தொழுகை யில்லாமலிருந்து அனேகம் சக்காத்து சதக்காக்கள் கொடுத்திட்டாலும் அவர்கள் கொடுக்கப்பட்ட கொடைகள் ஒன்றும் கபூலாக மாட்டாது அவர்களும் முஹ்பிக்குத் தனத்தை யுடையவர்களாக போய்விடுவார்கள் அல்லாஹுத்த ஆலா நம்மளுக்கு விதிக்கப்பட்ட அஞ்சொகுத்துத் தொழுகைவிடாமல் தொழுதும் றமலான் மாதத்தில் முப்பது நோன்பு பிடித்தும் உங்கள் கைகளிலிருக்கப்பட்ட பணங்களுக்கு தகுந்தபடிக்கு சக்காத்து சதக்காக்கள் கொடுத்தும் யேழை யெளியோர்களுக்கு ஒசீ பணங் கொடுத்துப் பசியாற்றியும் எல்லா வுயிர்கள் பேரிலும் தன்னுடைய உயிர்போல் யீகை இரக்கம் வைத்தும் கோபத்தை ஹறாமாக்கியும் விலக்கல் யென்னப்பட்ட ஹறாமான கெட்ட செயல்களைவிட்டு நீங்கியும் உங்களளவில் இருக்கப்பட்ட பணங் காசுகளுக்கு சக்திக்குத்தக்கபடி பள்ளி வாசல்களைக் கட்டியும் அல்லது பள்ளிவாசல்களுக்கு யாதாமொரு ஒத்தாசை செய்தும் இந்த அமல்படிக்கு நீங்கள் இந்த அமலைச்செய்து பெற்றுக்கொண்டால் உங்களுக்கு அந்த ரஹ்மான் மேலாம் பதவியாகிய ஏழாவது சொர்க்கலோகத்திலே மகா நவரத்தினம் பொருந்திய வடிவுகளான எழுபது வீடு கொடுக்கப்படும்.

அந்தந்த வீடுகளில் நூறு கூறுவிங்கப் பெண்களையும் கொடுக்கப்படும் அந்தந்த வீடுகளில் போயிருந்து அந்தந்தப்பெண்களை நீங்களனுபவித்து நெடும் ஊழியூழி காலம் வரைக்கும் அந்த யிடத்திலேயே தரிபாடாக யிருப்பீர்கள் ஆண்களாவது பெண்களாவது நீங்கள் செய்கிற அலமாகிறது இராத்திரி காலத்தில் தனித்திருந்து ஓதவேண்டியது அஸ்தகுபிறுல்லாஹல் அலீமென்று நூறும்பின்புலாயிலாஹ இல்லல்லாஹு முகம்மதுற்ற சூலுல்லாஹியென்று நூறும் பின்னே வாத்து 200-பிள் லாயிலாஹி இல்லல்லாஹு யெட்டுதிக்குறு நூறும் அந்த விவரங்களாக முப்பத் தொன்பது நாளைக்குச் செய்யவும் நாற்பதாவது நாளையில் இந்த விவரப்படிக்கு நீங்கள் செய்துவிட்டு இரண்டு கண்ணையும் மூடிக்கொண்டு வாயைமூடி கீழுதடு ஒரு விரல் தாழ்த்து நாவெடுத்துச் சொல்லாமல் ஹிம்ஹிம் யென்று கொஞ்சநேரம் இந்த எழுத்தை கல்பாய் உதுக்க உறுக்க இரண்டு புருவத்திற்கு மிடையில் இருக்கப்பட்ட ஞானக்கண் திறந்து உங்கள் முன்னில் காங்கு நிறமான ஒரு ஒளிவு காணப்படும்.

அந்த ஒளிவில் நின்றும் கண்ணுடி காணப்படும் அந்தக் கண்ணுடி எவ்விதமாயிருக்குமென்றால் வட்டமாக யிருக்கும் அதைச் சுத்தி முதல்வளயம் சிவப்புகள் அழுத்தியதாக யிருக்கும் இரண்டாவது வளயம் நாகரத்தினுதிகள் அழுத்தியதாகயிருக்கும் மூன்ருவது வளயம் சிவ ரத்தினுகள் அழுத்தியதாக யிருக்கும் நாளாவது வளயம் பச்சைகல் வழுத்தியதாக யிருக்கும் ஐந்தாவதுவளயம் வயிரமழுத்தியதாக யிருக்கும் ஆருவது வளயம் ஆணிமுத்து அழுத்தியதாக விருக்கும் ஏழாவது வளயம் பவளமழுத்தியதாக விருக்கும் இப்பேர்க்கொத்த இனங்களாலே அழுத்தப்பட்ட வேலைகளாக விருக்கும் உங்கள் முன்னிலையில் அந்தரங்கமோக வந்து நிற்கும் நீங்கள் அந்த நேரத்தில் கண்ணுல் நோக்கிப்பார்க்கவும் அப்படிக்குப் பார்த்தவுடனே உங்களுக்குத் தெரியப்பட்ட காட்சிகளாவது ஆகாசம் பூமி மலை கடல் நதி பாதாளம் அறுஹங்குருஉ சொர்க்கம் நரகம் பதினெண்ணுயிரம் ஆலமும் அதற்கு அடங்கிய படைப்புகள் அனைகங்களும் உங்களுடைய முன்னிலையில் சமீபமாகத் தெரியப்படும்.

அப்படிக்கு அதுகள் கொஞ்சநேரந் தெரியப்படும் பிறகு அதுகளெல்லாம் மறைந்துவிடும் அதற்குப் பிறகு உங்களுக்கு ஒரு பாதை காணப்படும் அந்தப் பாதையை நோக்கிப் பார்க்கவும் அந்தப் பாதையில் தெரிகின்ற காட்சிகளாவது தோட்டம் ஒன்று காணப்படும் அந்தத் தோட்டமும் இவ்வளவவ்வளவு வருஷத்து தொலைதூர நீளமென்றும் இவ்வளவு வருஷத்து தொலைதூர அகலமென்றும் சொல்லக்கூடாத தோட்டங்களாக யிருக்கும் அந்தத்தோட்டம் முத்தால் அழுத்திய திருமதிலாக விருக்கும் அந்தத்தோட்டம் மஞ்சணிற மின்னலைப்போல் அழகாயிருக்கும் அந்தத் தோட்டத்தில் நிற்கும் மரங்களோ மாதுளமரங்களும் மாமரங்களும் வாழைமரங்களும், கொய்யாமரங்களும் பிலாமரங்களும், முந்திரிமரங்களும், தென்ன மரங்களும், நார்த்தை மரங்களும், இன்னும் இந்த மரங்கள்கூட அநேகங்களான மரங்கள் நிற்கப்படுகின்றன. அந்த மரங்களை இன்ன மரங்களென்றும், இன்னவடிவுகளென்றும், இன்ன அழகுகளென்றும், இன்ன நிறங்களென்றும் சொல்லக்கூடாத மரங்களாக விருக்கும்.

அந்தந்த மரங்களிலே கிடைக்கும் கனிவர்க்கங்களோ, அதினுடைய பெருப்பங்களோ, அதினுடைய வடிவங்களோ, அதினு

டைய இன்பங்களோ, அதினுடையருசிகளோ, அதினுடைய மது ரங்களோ எவரெவர்களாலும் சொல்லக்கூடாத கனிகளாக விருக்கும். இன்னம் அந்தத் தோட்டத்தில் இருக்கப்பட்ட மணற்களோ பசுவின் பாற்களைக் காட்டிலும் ஆயிரம்பங்கு அதிகமுள்ள வெள்ளை நிறமான மணற்களாயிருக்கும் அந்த மணற்களில் கிடக்கும் கற்களோ பச்சை கல்லாக விருக்கும் இன்னம் அந்தத்தோட்டத்தில் நிற்கப்பட்ட வர்ன வர்னங்களான பூச்செடிகளோ 1,10,100,1000,10000 லட்சம் கோடி சங்கம் மகாசங்கம் அற்புதம் நிற்புதமென்று சொல்லாநின்ற கணக்கிலடங்காத பூச்செடிகளாக விருக்கும் இன்னும் அந்தத் தோட்டத்திலிருக்கும் வீடுகளோ முத்தினுலேயும், வயிரத்தினுலேயும், பவளத்தினுலேயும், மாணிக்கத்தினுலேயும், பச்சையினுலேயும், சிவப்பினுலேயும், நாகரத்தினத்தினுலேயும், சீவரத்தினத்தினுலேயும் கோமேதகத்தினுலேயும், புஷ்பராகத்தினுலேயும், வைடூரியத்தினுலேயும், இந்திந்தக் கல்லுகளினுலேயும் பணதிகளாகச் செய்யப்பட்ட வீடுகளாக விருக்கும்.

அந்தந்த வீடுகள்தோறும் பச்சை, பவளம், சிகப்பு, வைரம், இதுகளினுல் தூண்களை நிறுத்தித் தூணுக்குத் தூணு குறுக்கே மாணிக்கம், வைரம், இந்த கற்களை வளையாகப்போட்டு ஆயிரத்தெட்டு மாற்று தங்கத்தால் செய்த சங்கிலியால் கொழுவி அதற்குக்கீழ் ஒன்பதுவகை ரத்தினுதிகளால் அழுத்தப்பட்ட தொட்டியிலே கொழுவிக்கொழுவி அந்தந்த வீடுகள் தோறும் இருக்கும் இன்னும் அந்த வீடுகளைச் சுற்றியும், தோட்டங்களைச் சுற்றியும், வர்னங்களான பூச்செடிகளைச் சுற்றியும் கனிவர்க்கங்களான மரங்களைச் சுற்றியும், பாலாறு, தேனுறு, மதுவாறு, இப்போர்க்கொத்த மதுரம் பொருந்திய ஆறுகளாக மூணுறுகளோடிக் கொண்டே யிருக்கும்.

இன்னும் அந்தந்த வீடுகள் தோறும் இருக்கும் பெண்களினுடைய அழகுகளோ, அவர்களினுடைய நிறங்களோ, அவர்களினுடைய வாசங்களோ, எவர்களாலும் சொல்லக்கூடாத அரிதான பெண்களாயிருக்கும். இன்னும் அவர்களுடைய கூட்டத்தில் காது, நெற்றி, கழுத்து, மூக்கு உதடு, வாய், நெஞ்சு, ஸ்தனம், கை, வயிறு, தொப்புள், இடை, அல்குல், பாதம் இதுகளுடைய

அழகையும், நிறத்தையும், ஒளிவையும் பரிமளங் கமழாநின்ற வாசங்களேயும் மட்டிட்டுச் சொல்லக்கூடாத மகா அறிதான வடிவு சௌந்தர அழகு பொருந்திய பெண்களாக விருக்கும்.

இன்னும் அதிலிருக்கப்பட்ட மணற்களுடைய வாசங்களோ புனுகு, சவ்வாது, அத்தர், பன்னீர், சந்தனம், இந்த ஐந்தில் இருக்கப்பட்ட வாசத்தைக் காட்டிலும் ஆயிரம் பங்கு அதிக முள்ள வாசனைகளுடைய தாயிருக்கும் இன்னும், அந்தத் தோட்டங்களைச் சுற்றி வீசிவருகா நின்ற காற்றுகளோ பரிமளமென்று சொல்லாநின்ற வாசங்களைக் காட்டிலும் பதினாயிரம் பங்கு அதிக முள்ள வாசங்களுடைய காற்றுகளாயிருக்கும்.

இந்தப் பெண்கள் அந்த மதுரமுள்ள தண்ணீர்களில்முழுகி இந்திரவர்னப்பட்டுகளை உடுத்தி மகா அழகு பொருந்திய நகை ஆபரணங்களையும் பூண்டு மகாமதுரம் பொருந்திய முப்பத்திரண்டு வகையான சோறுகளும் மகாராசிகளாகிய முப்பத்திரண்டு நளபாகத்துடனே கறிகளும் உண்டு தின்று மரங்களிலேகிடக்கும் கனிவர்க்கங்களையும் பசியாறி பாலாறு, தேனாறு, மதுவாற்றத் தண்ணீர்களையும் குடித்துச் சில சில பெண்கள் அந்த அன்ன வூஞ்சல் தொட்டியில் போயிருந்து சுபசோபனமாக ஆடிக்கொண்டே யிருப்பார்கள் அவர்களுக்கு அந்தத் தோட்டத்தைச் சுற்றி வீசிவரும் காற்றுகளோ பரிமளவாசத்தைப் போலும் 100 பங்கு வாசமுள்ள காற்றுகளாயிருக்கும். இன்னும் எந்தெந்த நேரமும் அந்த பெண்கள் அந்த ரகத் தொட்டியிற் போயிருந்து ஆடிக்கொண்டே யிருப்பார்கள்.

இன்னும், அந்தத் தோட்டத்துக்கு நடுவில் ஒரு கூப்பா வொன்றிருக்கின்றன அது ரொம்ப உயரமும் ரொம்ப பொருப்பமுமுள்ளதா யிருக்கும். அந்தகுப்பா என்னபணிதிகளால் செய்திருக்குமென்றால் வயிரம், முத்து, பவளம், மாணிக்கம், நாகரத்தினம், சீவரத்தினம், பச்சை, சிவப்பு, வைடூரியம், புஷ்பராகம், கோமேதகம், இப்போர்க்கொத்த கல்லுகளால் பணிதிகள் செய்யப்பட்ட வேலைகளாயிருக்கும் அந்த குப்பாவுக்கு உயரம்வைத்திருக்கிற சிகரங்களாகிறது ஒன்பதுவகை ரத்தினதிக் கல்லுகளினால் அழுத்தப்பட்ட சிகரங்களா யிருக்கும்.

இன்னும், அந்த குப்பாவுக்கு நாலுவாசல் உண்டாயிருக்கின்ற ஒருவாசல் முத்தால் அழுத்திய நிலையும், தங்கத்தினால் போட்ட கதவுமாயிருக்கும். இரண்டாவது வாசல் பவளத்தாலழுத்திய நிலையும், பொன்னினால் போட்ட கதவுமாயிருக்கும். மூன்றாவது வாசல் வைரத்தினால் அழுத்திய நிலையும், வெள்ளியினால் போட்ட கதவுமாயிருக்கும். நாலாவது வாசல் மாணிக்கத்தினால் அழுத்திய நிலையும், ஒன்பதுவகை ரத்தினாதிகளால் அழுத்தப்பட்ட கதவுமாயிருக்கும். இன்னும், அந்தக்குப்பாவுக்கு நடுவில் நவமணிகளால் அழுத்தப்பட்ட சப்ரமஞ்சத்தன்ன வூஞ்சல் இரண்டு தொங்கும் அதுகளில் ஒன்றில் நூறு முஹம்மது யென்னப்பட்ட ஒளிவும், மன்றொன்றில் குத்தூசு யென்னப்பட்ட முகியித்தீனென்ற வொளிவும், இந்த இரண்டு வொளிவும், அந்த சப்ரமஞ்ச அன்னவூஞ்சல் தொட்டியில் துயில்புரிந்துக்கொண்டேயிருக்கும்.

அந்த நேரத்தில் ஒவ்வொரு தொட்டிகளின் தலைப் பக்கம் இருபெண்களும், கால்பக்கம் இரு பெண்களுமாக நின்று ஆட்டிக்கொண்டே யிருப்பார்கள். இன்னும் சில பெண்கள் வெண்சாமரம் வைத்து வீசிக்கொண்டே நிற்பார்கள். இன்னும் சில பெண்கள் வீணை முதலிய வாத்தியர்களை வைத்து ராகங்களாகப் பாடிக்கொண்டே நிற்பார்கள். இதுகளெல்லாம் உங்கள் மனக்கண் டிறந்து வெளியாகி இந்தக்காட்சிகளெல்லாங் காணப்படும். நீங்களிந்த இரண்டு வொளிவையும் கண்டவுடனே உங்களுடைய கல்பு காபுல் காபாமென்னுங் கடலைப்போல் விரிவாகிவிடும். நீங்களும் மூமீன் தனம்பெற்ற பேர்களாகி விடுவீர்கள். உங்களுக்கும் அவிலியாத்தன முண்டாகி விலாயத்துகளும் வெளியாகிவிடும்..

நீங்களும் நிதநிதங் காணக்கூடாத காட்சிகளெல்லாங்காணப்படுவீர்கள். நம்மளுக்கு குருவாகிறது அமுத முகியித்தீனாண்டவர்களாக யிருக்கும். இந்த குருவைக் காணாதபேர்கள் செய்யப்பட்ட தவங்கள் ஒன்றும் நிறைவேறமாட்டாது. இந்தக் குருவினாலேதான் நம்மளுக்கு ஞானம் வெளியாகி அருள்களைப் பெற்றுக்கொள்ள வேண்டியது பூலோகத்தில் முரீதுவைத்துக் கொடுக்கப்பட்ட குருமார்களையிட்டு நம்மளுக்கு யாதாமொரு வழியையும், புலனையும் கொடுக்குமென்றும் வழிகள் வெளியாகுமென்

றும், அருள்களைப் பெற்றுக்கொள்ளலாமென்றும். மாந்தர்கள் நாடிநாடி நாளையும் போக்கி தேடித்தேடி வயசுகளையும் போக்கி காட்சிகள் ஒன்றுங் காணாமல் வீணாகி மாண்டு போவார்களன்னி யில் கொஞ்சமாவது பலன்களை அடையப் போகிறதில்லை.

பூலோகத்தில் முரீதுவைத்துக் கொடுக்கப்பட்ட குருமார் கள் எப்பேர்க்கொத்த பேர்களாக இருக்க வேணுமென்றால் அவர்கள் மண்ணாசை, பெண்ணாசை, பொருளாசை, இந்த மூன்று ஆசைகளையும் ஆற்றபேர்களாகவும் அல்லாஹுத்த ஆலாவின் அருள்களைத் தெண்டித்துப் பெற்றுக்கொண்ட பேர்களாகவு மிருக்க வேணும் அவர்களை நரகமென்னப்பட்ட நெருப்பு அவர் களைத்தீண்ட ஹறாமாயிருக்கும் அவர்கள் திரேகங்களில் நெருப்பு முதலானதுகள் பட்டால் குளிர்ந்த பச்சை தண்ணீராகிவிடும் இப்படியாகக் கொடுத்த அருள்களைப் பெற்றபேராயிருந்து உங் களுக்கு முரீது வைத்துக் கொடுத்தாலும் குத்தூசு என்னப்பட்ட முகையதீனென்ற ஒளிவுவெளியானால்தான் உங்களுக்கு காட்சி கள் கொடுக்கப்படும் அந்த குருவினாலேயே நம்மளுக்கு ஞானம் வெளியாகி காட்சிகளைப் பெற்றுக்கொண்டு சொர்க்கலோகப் பதவியடைய வேண்டியது.

இன்னஞ் சிலபேர்கள் பூலோகத்தில் வயிறு பிழைக்க சில மாந்தர்களாக தவப்பிரசாலி, தபோதனர்கள், தவங்களைப் பெற் றுக் கொண்டவர்களைப்போல பூலோகத்தை மருட்டி மெச்சி வைக்கும்படியான சில வேஷங்களைப் போட்டுக்கொண்டு வந்து உங்களை மருட்டி ரொம்பவும் சாலங்களைச் செய்து முரீதுகள் தாரேனென்றுசொல்லி மருட்டுவார்கள் அவர்களை நீங்கள் ஒரு அணுவளவும் நம்பவேண்டாம். இன்னமும் அவர்கள் உங்கள் காதுகளுக்கும் இன்பமாக சிலயேட்டுப் பிரதிகளிலிருக்கிற பாட் டுகளை நாகரீகத்தோடும் படித்துச் சொல்லுவார்கள் அதுகளைக் கேட்டு நீங்கள் மருண்டிட வேண்டாம் தவம் தவமென்னப்பட் டது லாயிலாஹ இல்லல்லாஹு முகம்மதுறசூலுல்லாஹியென்ற கலிமாக்குள்ளே எல்லாப்படிப்புகளும் அடங்கி யிருக்கிறது.

அதற்குமேல் யாதாமொன்றுங் கிடையாது நல்லது பறக்கப் பட்ட நல்ல பாம்பு கடைவாய்க்குள் நாகரத்தினதி ஜீவரத்தினதி யென்று சொல்லப்பட்ட இரண்டு கல் அதின் கடைவாய்க்குள் ளிருக்கின்றது அந்தப் பாம்பானது உங்கள் கிட்டேவந்து ஓமனிதர்களே என்னுடைய கடைவாயிற்குள் நாகரத்தினதி

ஜீவரத்தினுதி யென்னப்பட்ட இரண்டு கல் இருக்கிறது அந்தங் கல்லே நான் கக்கி உங்களிடத்தில் தருகிறேன் அதை நீங்கள் வாங்கிக்கொண்டு கடைகள் மற்ற வியாபாரிகளிடத்தில் விற்றுச் சிலவு செய்யுங்களென்று சொல்லுமா அல்லது அந்தப் பாம்பை யாவது நம்மளால் யெப்போதிலுங் கண்டுபிடிக்க முடியுமா அல்லது காடு செடிகள் மலை வனந்திரங்களுக்குத் தேடினும் அந்தப் பாம்பைக் காணக்கூடுமா அதைப்போல தான் அல்லாஹு த்த ஆலாவின் அருள்களைத் தெண்டித்து பெற்றபேர்களை நம்மளால் முடியாது.

இன்னும், கலிமாவுக்கு அதிகமாக யாதாமொன்றுங் கிடையாது கலிமாவையும் சலவாத்தையும் நாளுக்குநாள் அதிகமாகச் சொல்லி வருவீர்களாகில் நம்மள் றசூல்நாயகம் அவர்களை காணப்படும் நூறு என்னப்பட்ட ஒளியும், குத்தூசு என்னப்பட்ட ஒளியும் இரண்டு ஒளிவுமொன்றுதான் நீங்கள் பூலோகத்தில் இந்த இரண்டு ஒளிவையும் கண்டு அதுகளால் காட்சிகளைப் பெற்றுக் கொண்ட பேர்களுக்கு நடக்கப்பட்ட நன்மைகளாவது அவர்கள் மவுத்தாகி தாருல் பனு என்கிற பித்துனுலபித்தைவிட்டும் தாறுல்பகா வென்கிற தலம் போய்ச் சேர்ந்தால் நீங்கள் கண்ட தோட்டங்களில் போயிருந்து மகா மதுரமுள்ள சோறுகளும் மகாருசிகளா யிருக்கப்பட்ட கறிவகைகளான பதார்த்தங்களும் உண்டு தின்று பசியாறி மரங்களிலே கிடக்கும் அனேகங்களான கனிவர்க்கங்களையும் அருந்தி பாலாறு, தேனறு, மதுவாறு, இந்தத் தண்ணீர்களையுங் குடித்து மகா சந்தோஷங்களாக அந்தந்த வீடுகள் தோறும் யிருக்கப்பட்ட அன்னவூஞ்சல்களில் போயிருந்து சுப சோபனமாக ஆடிக்கொண்டே யிருப்பீர்கள்.

பின், இதற்குமேல் அதிகமாகிய சொர்க்கலோகங் கிடைக்கப்படும். அந்தச் சொர்க்கலோகத்தைச் சுற்றிலும் இந்தத் தோட்டங்களைப்போல 4 தோட்டங்கள் இருக்கின்றன. அதுகளிலே இப்பேர்க்கொத்த நிஃமத்துகளாக யிருக்கும் சொர்க்கலோகத்திற்கு ஏழுதிருமதிலுண்டாயிருக்கின்றன. முதலாவது திருமதில் வயிக்கல் அழுத்தியதா யிருக்கும். இரண்டாவது திருமதில் முத்தினல் வழுத்தியதாயிருக்கும். மூன்றுவது திருமதில் சிவப்புனலழுத்தியதாயிருக்கும். நாலாவது திருமதில் பவளமழுத்தியதா யிருக்கும், ஐந்தாவது திருமதில் பச்சைக்கல் லழுத்தியதா யிருக்

கும். ஆறுவது திருமதில் மாணிக்கத்தினு லழுத்தியதாயிருக்கும். ஏழாவது திருமதில் நாகரத்தினதிகளா லழுத்தியதா யிருக்கும்.

இந்த ஏழு திருமதிலும் ரொம்ப பெருப்பமும், ரொம்ப அழகும் ரொம்ப நெடுந்தூரமுமுள்ளது திருமதிலா யிருக்கும் அங்கே தரைகளாகிறது தங்கத்தினுல் செங்கல்லும், பொன்னிறுற் செங்கல்லும், வெள்ளியினுல் செங்கல்லும், பதித்த தரைகளாயிருக்கும் அந்தத் தரையின்மேல் இருக்கப்பட்ட மணற்களோ பசுவின் பாலைக்காட்டிலும் பதினுயிரம் பங்கதிகமான வெள்ளை நிரமுள்ளதா யிருக்கும் அந்த மணற்கள் மேலே கிடைக்குங் கற்களோ ஒன்பதுவகை ரத்தினுதி கற்களாயிருக்கும் அந்த மணற்களுடைய வாசங்களோ புனுகு, சவ்வாது, அத்தர், பன்னீர், சந்தனம் இந்த ஐந்து தினுசுகளை ஒன்றுபடுத்தினுல் அதுகள் எவ்வித வாசனைகளைத் தருமோ அந்த வாசனைகளைக் காட்டிலும் பதினுயிரம் பங்கு. அதிகமான வாசனைகளுடையதா யிருக்கும்.

இன்னும், அந்தத்தரைமேல் நடந்தால் பூப்பஞ்சணை மெத்தையின்மேல் நடந்தால் காலுக்கு என்ன மெதுவாயிருக்குமோ, அதுபோல் ஆயிரம்பங்கு மெதுவும் குளிர்ச்சியும் ருஹத்துகளாயிருக்கும் இன்னும் அத்தரையின்மேல் இருக்கப்பட்ட வீடுகளோ ஒரே முத்திலேயும், ஒரே வைரத்தினுலேயும், ஒரே பச்சையினுலேயும், ஒரே சிகப்பினுலேயும், ஒரே மாணிக்கத்தினுலேயும், ஒரே புஷ்பராகத்தினுலேயும், ஒரே பவளத்தினுலேயும், ஒரே நாகரத்தினத்தினுலேயும், ஒரே சீவரத்தினத்தினுலேயும், ஒரே நீலத்தினுலேயும், ஒரே கோமேதகத்தினுலேயும், ஒரே யாகூத்து கல்லினுலேயும் ஒரே வைடூரியத்தினுலேயும், இப்பேர்க்கொத்த ஒவ்வோர் கல்லுகளினுலேயும், ஒவ்வொரு முத்துகளினுலேயும் செய்யப்பட்ட அறுபத்துநாலு அடுக்குள்ள மெத்தை வீடுகளாயிருக்கும்.

ஒவ்வொரு மெத்தைகளில் தூண்கள் முத்து, வயிரம், பச்சை, சிவப்பு, மாணிக்கம், இப்பேர்க்கொத்தவைகளாக அழுத்திய தூண்களாக யிருக்கும். ஒவ்வொரு மெத்தைகளில் ஒவ்வொரு விதமான அழகுகளுடைய வேலைகளாயிருக்கும். இன்னும் ஒவ்வொரு மெத்தைகளில் முத்து, பவளம், மாணிக்கம், வயிரம், சிகப்பு பச்சை, வைடூரியம், கோமேதகம், மரகதம், இப்பேர்க்

கொத்த கல்லுகளாயிருக்கும். ஒவ்வொரு சன்னல்வாசற்களில் முத்து, வயிரம், பவளம், பச்சை, சிகப்பு, மாணிக்கம், தங்கம், பொன், வெள்ளி, இதுகளாக ஆயிரத்தி அறுபத்து நாலுவித மான இனங்களாக யிருக்கும்

இன்னும், ஒவ்வொரு மெத்தைகளில் ஆயிரத்தெட்டு மாற் றுத் தங்கத்தினால் செய்த சங்கிலிகளில் ஒன்பதுவகை ரத்தினதி கல்லுகளினால் அழுத்தப்பட்ட அன்னவூஞ்சல்களாக ஆயிரத் திருபத்தினாலு விதங்களாயிருக்கும். இவ்விதமான நவரீதம் பொருந்திய அறுபத்திநாலு மெத்தை வீடுகளுமிருக்கின்றன. ஒவ்வொரு வீடுகளுடைய பெருக்கங்களோ அஷ்டகிரிமலையைப் போல பெருக்கமும் நெடுங்கிரியைப்போல உயரமுமுள்ளதா யிருக்கும் இன்னமும் முத்தினாலே அழுத்திய தரைகளும் பவ ளத்தினாலே அழுத்திய தரைகளும் மாணிக்கத்தினாலே அழுத்திய தரைகளும், பச்சைகளினாலே அழுத்திய 'தரைகளும் இப்பேர்க் கொத்த கல்லுகளினால் அழுத்தப்பட்ட தரைகளில் பாலாறு, தேனாறு, மதுவாறு என்னப்பட்ட மகா மதுரமுள்ள இனிப்புக ளான ஆறுகளாக முப்பத்திரண்டு விதமான ஆறுகளோடிக் கொண்டேயிருக்கும்.

இன்னம் அனேக விதங்களான தோட்டங்களிருக்கின்றன அந்தத் தோட்டங்கள் இவ்வளவு நிகளமென்றும் இவ்வளவு அகலமென்றுஞ் சொல்லக்கூடாத தோட்டங்களா யிருக்கும். அந் தத் தோட்டங்களில் நிற்கப்பட்ட மரங்களோ தங்கம், வெள்ளி, பொன், பச்சை, மாணிக்கம், சிவப்பு, வயிரம், இதுகளாக யிருக் கும். அந்த மரங்களிலேயிருக்கும் கனிவர்க்கங்களோ முத்து போல் சில கனிகள் பவளம்போல் சில கனிகள் மாணிக்கம்போல் சில கனிகள் இவ்விதமான கனிகளாயிருக்கும். அந்தந்த மரங்களி லிருக்கிற பூக்களில் நின்றும் ஒழுகா நின்ற தேன்களாவது அந் தந்த ஆறுகளில் ஓட்டப்பட்ட தண்ணீர்கள்மேலே வழிந்துக் கொண்டே யிருக்கும் அந்தந்த மரங்களிலே இருக்கப்பட்ட பற வைகளோ முத்துபோல் சிலபறவை பவளம்போல் சிலபறவை மாணிக்கம்போல் சில பறவை தங்கம்போல் சிலபறவை பொன் னைப்போல் சிலபறவை வெள்ளியைப்போல் சிலபறவை ஆக இவ் விதமான பல பல வர்ணங்களுடைய பறவைகளாகக் கோடாகோடி களாயிருக்கும்.

இன்னும் அந்தப்பறவைகள் சொல்லும் மூமின் முசிலிம்களே நீங்கள் பூலோகத்தில் நயத்தைச்செய்து நல்வழியென்ற தவத்தைப் பெற்றுக்கொண்டு வந்தபேர்களே நீங்கள் எங்களைப் பாருங்களென்று ரொம்பவும் வணக்கத்துடன் சலாஞ் சொல்லும் இன்னும் ஒவ்வொரு வீடுகளுக்கு முன்னில் ஒவ்வொரு தெப்பக் குளங்கள் ஒன்றொன்று யிருக்கின்றன அந்த குளத்துக்கு கரையாகிறது தங்கம் வெள்ளி இதுகளால் பதித்த தரைகளாயிருக்கும் இன்னும் அந்த குளத்துக்கு நாலு படித்துறைகளுண்டாயிருக்கின்றன ஒரு படித்துறை முத்து இரண்டாவது படித்துறை பவளம் மூன்றாவது படித்துறை வயிரம் நாலாவது படித்துறை மாணிக்கம் இதுகளினால் அழுத்திய படித்துறைகளாயிருக்கும்.

இன்னும் அந்தக்குலத்திற்கு நடுவில் முத்தினாலே ரொம்பவும் உயரமுள்ள ஒரு தூணு நிறுத்தியிருக்கும் அந்தத் தூணிலெழுதி யிருக்கிறதாவது லாயிலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர்றசூலுல்லாஹி யென்னுங்கலிமா எழுதியிருக்கும் அந்தத் தூணுந்தான் தீனென்னபபட்ட தூணுயிருக்கும் இன்னுமந்த குளத்துக்கு முன்னிலையில் முத்து, வயிரம் பவளம் மாணிக்கம், சிகப்பு பச்சை நாகரத்தினதிக்கல் கோமேதகம் தங்கம், பொன் வெள்ளி, இப்பேர்க்கொத்த பலவித வகைகளா லழுத்தப்பட்ட பணிதிகளாகச் செய்யப்பட்ட மேடைகள் அறுபத்து நாலுவிதமான மேடைகளாயிருக்கும் ஒவ்வொரு மேடைகளில் பவளம் வைரம் மாணிக்கம் சிவப்பு இவைகலாலே தூண்கள் குறுக்கே பச்சைக்கல் கோமேதகக்கல் யாகூத்துக்கல் புஷ்பராகக் கல் இந்தக்கற்களை வளையாகப்போட்டு ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கத்தினால்செய்த சங்கிலியும் கொழுவிகீழ் ஒன்பதுவகை ரத்தினதி கல்லுகளினால் அழுத்தப்பட்ட தொட்டிகளாயிருக்கும்.

இன்னும் ஒவ்வொரு மேடைகளுக்கு முன்னிலையில் முத்து, வயிரம் பவளம் மாணிக்கம் நாகரத்தினம் சீவரத்தினம் இவைகளால் செய்யப்பட்ட வேலைகளாயிருக்கும் ஒவ்வொரு மேடைகளுக்கு முன்னிலையில் நானாவித குப்பாக்களிருக்கின்றது முத்து பவளம் மாணிக்கம் வயிரம் பச்சை சிவப்பு இவைகளால் செய்யப்பட்ட பணிதிகளாக இருபத்திரண்டு அடுக்குள்ள குப்பார்களாயிருக்கும். ஒவ்வொரு கல்லுகளாலே அழுத்தப்பட்ட வேலைகளா

யிருக்கும் ஒவ்வொரு குப்பாவுடைய மெத்தைகளில் அறுபத்து நாலு விதமான ஊஞ்சல் தொட்டிகளா யிருக்கும் இன்னும் சப்ர மஞ்சக் கட்டில்கள் நாற்காலிகள் புட்டுவங்கள் அறுபத்து நாலு விதப் பணிதிகளான வேலைகளா யிருக்கும்.

இன்னும் அந்த குப்பைகளைச் சுற்றியும் அந்த மேடைகளைச் சுற்றியும் அந்த தெப்பக் குளங்களைச்சுற்றியும் கோடி கோடிகளான பலபல வர்ணங்களான கனிவர்க்கங்களுடைய மரங்களும் பல நிறங்களுடைய வர்ணங்களான பூச்செடிகளா யிருக்கும் ஒவ்வொரு செடிகளின் பூவில் கமழா நின்ற வாசனைகளானது பரிமள வாசனையைக் காட்டிலும் ஆயிரம்பங்கதிகமுள்ள வாசனைகளுடையதா யிருக்கும் இன்னம் அந்தக்குளத்திலிருக்கப்பட்ட தண்ணீர்களானது பசுவின் பாலில் நின்றும் ஆயிரம்பங்கு அதிகமுள்ள வெள்ளையும் தேனில் நின்றும் ஆயிரம்பங்கு அதிகமான மதுரமுமுள்ள தித்திப்பான தண்ணீர்களா யிருக்கும் இன்னும் அந்தந்த வீடுகள் முன்னில் முத்தாலும், பவளத்தாலும், வயிரத்தாலும மாணிக்கத்தாலும் இப்பேர்க்கொத்த கல்லுகளால் அழுத்தப்பட்ட ஆயிரத்தறுபத்து நாலுவிதங்களாக இருக்கப்பட்ட இருப்பிடங்களா யிருக்கும்.

இன்னும் அந்த வீடுகளைச் சுற்றியும், இன்னும் இந்தத் தோட்டங்களைச் சுற்றியும், குப்பார்களைச் சுற்றியும் மகா நவநீதம் பொருந்திய வேலைகளால் செய்யப்பட்ட இருப்பிடங்களால் ஆயிரத்தறுபத்து நாலுவிதமான இருப்பிடங்களா யிருக்கும் வீடுகள் தோறும் தோட்டங்கள் தோறும் இந்த விதங்களான இடங்கள் தோறும் இந்த கனிவர்க்கங்களான மரங்கள் தோறும் பாலாறு தேனாறு மதுவாறென்னப்பட்ட முப்பத்திரண்டு விதங்களான ஆறுகள்தோறும், அந்தந்த இடங்கள் தோறும் இருந்து இன்பங்களையும் வாசனைகளையும் சுகங்களையும் மதுரங்களையும் ருசிகளையும் அனுபவிக்கும்படியான பெண்களாகிறது கூறுலிங்கப் பெண்களாயிருக்கும் அந்த கூறுலிங்கப்பெண்கள் வடிவையும் ஒளிவையும் அழகையும் நிறத்தையும் குணத்தையும் இன்பத்தையும் மதுரத்தையும் சுகத்தையும் எவர்களாலும் மட்டிட்டுச் சொல்லக் கூடாத பெண்களாயிருக்கும்.

இன்னும் அந்தப் பெண்களின் அழகுகளோ ஒளிவுகளோ நிறங்களோ வடிவுகளோ இவைகளாகிறது சிவப்புநிறம் மின்னலில்

நின்றும் ஆயிரம்பங்கு அதிக ரூபிகளான வடிவு சௌந்தரியம் அழகுபொருந்திய பெண்களாயிருக்கும் மஞ்சள் நிறமின்னலில் நின்றும் ஆயிரம்பங்கு அதிக ரூபிகளான வடிவு சௌந்தரிய அழகு பொருந்திய பெண்களாகயிருக்கும் பச்சை நிற மின்னலில் நின்றும் ஆயிரம் பங்கு அதிக ரூபிகளான வடிவு சௌந்தரிய அழகுபொருந்திய பெண்களாயிருக்கும் காங்த நிறமின்னலில் நின்றும் ஆயிரம்பங்த அதிக ரூபிகளான வடிவு சௌந்தரிய அழகுபொருந்திய பெண்களாயிருக்கும் பச்சை நிறமின்னலில் நின்றும் ஆயிரப்பங்கு அதிக ரூபிகளானவடிவு சௌந்தரிய அழகு பொருந்திய பெண்களாயிருக்கும் வெள்ளை நிறமின்னலில் நின்றும் ஆயிரம் பங்கு அதிக ரூபிகளான வடிவு சௌந்தரிய அழகு பொருந்திய பெண்களாயிருக்கும் கருப்புநிற மின்னலில் நின்றும் ஆயிரம்பங்கு அதிக ரூபிகளானவடிவு சௌந்தரிய அழகு பொருந்திய பெண்களாயிருக்கும் நீலநிறமின்னலில் நின்றும் ஆயிரம் பங்கு அதிகரூபிகளானவடிவு சௌந்தரிய அழகுபொருந்திய பெண்களாயிருக்கும் ஊதா நிற மின்னலில் நின்றும் ஆயிரம்பங்கு அதிக ரூபிகளான வடிவு சௌந்தரிய அழகு பொருந்திய பெண்களாயிருக்கும்.

இந்த ஒவ்வொரு ஒளியில் நின்றும் ஆயிரம் பங்கு அதிகமுள்ளதாக ஒவ்வொரு கூறுலிங்கப் பெண்களை படைக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பெண்களின் வடிவில் ஆயிரம் பங்கில் ஒரு பங்குகளானது பூலோகத்தில் பிரகாசிக்கும் மின்னலென்று சொல்லப்படும் இன்னும் அந்தப் பெண்களின் திரேகங்களினுடைய வாசனைகளானது சாந்து சவ்வாது சம்பங்கி வெண்ணெய் தேய்த்து மல்லிகைமுல்லை இருவாட்சி மருக்கொழுந்து இந்த மலர்களைச்சூடி சந்திர பிரபை சூரிய பிரபை அணிந்து அவர்கள் அளகாபரணங்களை முடிக்கும் கூந்தல்களினுடைய ஒரு வாசனைகளும் நெத்தி, காது, புருவம், கண்கள், மூக்கு, உதடு, பல் இதுகளினுடைய ஒரு வாசனைகளும் பாலையும், பாகையும், தேனையும், தேவாமிர்தத்தையும் பதித்து மகா நாகரீகத்தோடும் அவர்கள் பேசாநின்ற நாவுகளினுடைய ஒரு வாசனைகளும் கழுத்து, கை, நெஞ்சு, ஸ்தனம், வயிறு, அல்குல், தொடை, பாதம் இவைகளினுடைய ஒரு வாசனைகளும் அவர்கள் ஒவ்வொரு தலங்களுக்கும் ஒவ்வொரு வாசனைகளுடையதாயிருக்கும் அந்தந்த தலங்களி

கிருக்கப்பட்ட வாசனைகளோ எப்பேர்க்கொத்த வாசனைகளா இருக்குமென்றால்,

தோங்கல்

பூவுஞ்சரிகுழல் சம்பங்கிவாசம்
புகில் அகில்புகை அத்தர்வாசம்
பேகவாய்குமிழ் விழிகுவளை
பெருத்தநாத்தத்தின் வாசமாகும்
சங்கைபழித்ததோர் மணிதுண்டங்கள்
சவ்வாதினுடை வாசமாகும்
கொங்கைஅதிரெண்டும் களபவாசம்
குறித்த அகிலவின் பாந்தவாசம்
பங்கையர் தன்னை பழித்தகாமம்
பச்சபரிமள வாசமாகும
மங்கையர்தன வயறுமேனி
மவுலாகஸ்தூரி வாசமாகும்
துரிடன்பாதமோ மல்லிகையும்
பூவில்பொருந்திய வாசமாகும்.

இன்னும், அந்தப் பெண்களின் வடிவுகளானது பகற்காலத தில் ஆயிரம் கிளைகளோடும் பிரகாசிக்கா நின்ற சூரியனானவன் அந்தப் பெண்ணைக்கண்டால் நம்மள் இந்தப் பெண்களுக்கு ஆயி ரம் பங்கில் ஒருபங்குகளாவது அழகில்லையே வடிவில்லையே என்று சொல்லி ரொம்பவும் வெட்கப்பட்டு ஒளித்து ஒளிவு ரொம்பவும் பிரகாசிக்காமல் மறைந்துவிடுவான் இன்னும் இராத்திரி காலங் களில் 16-கலைகளோடும் பிரகாசிக்காநின்ற பூரணச்சந்திரனானவன் அந்தப் பெண்களைக்கண்டால் நம்மள் அந்தப் பெண்களுக்கு ஆயி ரம்பங்கில் ஒரு பங்குகளாவது அழகில்லையே வடிவில்லையேஎன்று சொல்லி ரொம்பவும் விசாரப்பட்டு அழுது சலித்தவனாகி ஒளிவு பிரகாசிக்காமல் நின்று விடுவான்.

இன்னும் அந்தப் பெண்களை வாணங்களிலே யிருக்கப்பட்ட நட்சத்திரங்கள் கண்டால் நம்மள் இந்தப பெண்களின் தேகங் களிலிருக்கு மயிர்களின் அழகில்லையேயென்று ரொம்பவும் வெட் கப்பட்டு வானத்தை விட்டும் பூமியில் குதித்து விடும் இன்னும் அந்தப் பெண்கள் வாயைத்திறந்து அமிர்தத்தை கடல் தண்ணீ

ரில் துப்பினால் சத்த சமுத்திரங்களாகிய ஏழு சமுத்திரங்களும் மதுரம் பொருந்திய பால்கடலாகப் போய்விடும் இன்னும் அவர் கள் வாய் அமுர்தத்தைக் கொஞ்சம் கரைகளில் துப்பினால் கரை களிலிருக்கப்பட்ட மண் மரம் புற்பூடு மிருகஜாதி சகல சீவாத்து மாக்மள் எல்லாம் கஸ்தூரி வாசனைகளுடையதாகிவிடும் இன்னும் இந்தப்பெண்கள் தலை, காது, கழுத்து, கால் இதுகளில் அணிந் திருக்கப்பட்ட ஆபரணங்களிலொன்று பகற்காலத்தில் பூமியில் தவறி விழுந்தால் சூரியனுடைய சுடர் ஒளி மங்கிப்போய்விடும் இராத்திரி காலங்களில் அந்த ஆபரணங்களில் ஒன்று பூமியில் தவறி விழுந்தால் சந்திரனுடைய ஒளிவு மங்கிப்போய் விடும்.

இன்னும் இந்தப் பெண்களினுடைய வடிவையும், அழகை யும், நிறத்தையும், குணத்தையும், இன்பத்தையும், மதுரத்தை யும், ஒளிவையும், பரிமளங்கள் கமழாநின்ற வாசனைகளையும், எவர்களாலுஞ் சொல்லமுடியாத பெண்களாயிருக்கும் இந்தப் பெண்கள் அந்தந்த வீடுகள் முன்னிலையில் இருக்கப்பட்ட தெப் பக்குளத்தில் முழுகி வில்லூரி பட்டுகளையு முடித்து சீவி வகுந்து சாந்து சவ்வாது சம்பங்கி யெண்ணைகளைத் தேய்த்து மல்லிகை, முல்லை, இருவாட்சி, மருக்கொழுந்து இந்த மலர்களைச் சூடிச் சந்திரபிரபை அணிந்து அவர்களது அளகபாரமான கூந்தல்களை யும் முடித்து மையுண்ட சுருமாக்களை அவர்கள் கண்களிலிட்டு சொர்க்க லோகத்திலே இருக்கப்பட்ட முத்துமாலை, மோகன மாலை, பச்சைமாலை, பவளமாலை, வெயிரமாலை, சிவப்பு மாலை, மாணிக்கமாலை, நாகரத்தினமாலை, ஜீவரத்தின மாலை, இந்தமாலை கள் அவர்கள் கழுத்திலணிந்து ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கப் பணிதிகளால் செய்யப்பட்ட தண்டை கொலுசு பாடகங்கள் கால் களிலணிந்து சொர்க்கலோகத்துப் பரிமளவாசனைகளை அவர்கள் திரேகங்களில்பூசி மகா மதுரம்பொருந்திய 72-வகையான சோறு களும் மகா மதுரமுள்ள ருசிகளாக இருக்கப்பட்ட 72-வகையான கறிகளும் தங்கத்தட்டுகளில் சோறுகளும் பொன் தட்டுகளில் கறி களும் முத்து வயிரம் பவளம் மாணிக்கம் பச்சை இவைகளால் செய்த கிளாசுகளில் பாலாறு, தேனாறு, மதுவாறென்னப்பட்ட மகா மதுரமுள்ள தண்ணீர்களாக முப்பத்திரண்டு விதமான தண் ணீர்களும் இவர்களுக்கு முன்னில் வந்திருக்கும் இதுகளை இவர் கள் பசியாறி மரங்களிலே கிடைக்கும் அனேகங்களான கனிவர்க்

கங்களேயும் அருந்தி இந்தத் தண்ணீர்களேயும் குடித்து இந்தப் பெண்கள் மேடைரொம்பவும் சந்தோஷத்துடனே எழும்பிச் சில பெண்களி லிருக்கப்பட்ட அன்னவூஞ்சல் தொட்டிகளில்போ யிருந்து ஆடிக்கொண்டே யிருப்பார்கள்.

இன்னும் சிலபெண்கள் அந்த மேடைகளின்மேலிருந்து பந் தடித்து விளேயாடிக்கொண்டே இருப்பார்கள் இன்னுஞ் சில பெண்கள் மேடைகளிலிருந்து நாகரீகமான வீணே வரத்தியங் களே வைத்திராகங்கள் பாடிக்கொண்டே யிருப்பார்கள் இன்னும் சில பெண்கள் வீடுகளிலிருக்கப்பட்ட கட்டில்களில்போய் படுத்து நித்திரை செய்வார்கள் இன்னுஞ் சில பெண்கள் சூப்பாக்களில் போயிருந்து நாகரீகமான வார்த்தைகளேப் பேசிக்கொண்டே யிருப்பார்கள். இன்னும் சில பெண்கள் ஜோடி ஜோடிகளாகச் சேர்ந்து தோட்டங்களேச் சுற்றி விளேயாடுவார்கள். இந்தப்படி யாக அந்தப் பெண்கள் சொர்க்கலோகத்திலேயே எப்பவும் மவுத்தில்லாமல் நெடும் ஊழியூழிகாலம் வரைக்கும் அவ்விடத்தி லேயே சரிபாடாகவிருந்து வாசகங்கள் செய்வார்கள் ஒவ்வொரு வீடுகளிலிருக்கும் பெண்களோ நூறு இருநூறு முன்னூறு ஆயிரம்வரையில் இருக்கும் இதுதான் மூதலாவது சுவர்க்கமாக யிருக்கும்.

இரண்டாவது சுவர்க்கம் இதைப்போலே ஆயிரம் பங்கு அதிகமுள்ள அழகும், நிஅமத்துகளும் கூறுலிங்கப் பெண்களும் அதிகமாயிருக்கும். மூணுவது சுவர்க்கம் இதைப்போலே ஆயி ரம் பங்கு அதிகமுள்ள வாசகமாகவும், நிஃமத்துகளாகவும், கூறுலிங்கப் பெண்களும் அதிகமாயிருக்கும். நாலாவது சுவர்க் கம் இதைப்போலே ஆயிரம்பங்கு அதிக நிஃமத்துகளும், அழ கும், மரங்களுடைய கனிவர்க்கங்களும், வீட்டினுடைய அழகு களும், கூறுலிங்கப் பெண்களும் அதிகமாயிருக்கும் ஐந்தாவது சொர்க்கம் இதைப்போலே ஆயிரம்பங்கு மகா மதூரம்பொருந் திய வாசனேகளும், வடிவுகளும், கூறுலிங்கப் பெண்கள் அதிகமா யிருக்கும், ஆறுவது சொர்க்கம் இதைப்போல ஆயிரம்பங்கு ரொம்பவும் ருகத்தாவும் குளிர்ச்சியாகவும் ரொம்பவும் சுத்தமாக வும், ரொம்பவும் கூறுலிங்கப் பெண்களும் அதிகமாயிருக்கும். எழாவது சொர்க்கம் இந்த 6 சொர்க்கத்தைப்போலே ஆயிரம் பங்கு அதிகவடிவும், அதிக நிறமும் அனேகமான கனிவர்க்கங்

களும், அதிகமான நிஹமத்துகளும், அதிகமான சுகமும், அதிக மான குளிர்ச்சியும், அதிகமான ருகத்துகளும், அதிகமான கூறு லிங்கப் பெண்களும் அதிகமாயிருக்கும்.

8-வது, சொர்க்கமோ, ஜெனனத்தில் பிருதவசு என்று சொல்லப்படும் சொர்க்கலோகத்தில் பொழுது நிலவுங் கிடையாது அதற்கு வெளியாகிறது அல்லாஹுத்த ஆலாவுடைய அறுசின் சுடர் ஒளிவு வெளிச்சமாயிருக்கும். இன்னும் அல்லாஹுத்த ஆலா நூறு றஹ்மத்து வைத்திருக்கிறான் அதில் ஒன்றைப் பூமியில் மழையாக வருஷிக்கும்படி செய்து வைத்திருக்கிறான் மீதி றஹ்மத்து தொண்ணூத் தொன்பதையும் சுவர்க்க வாதிகளுக்குச் சொர்க்க லோகத்தில் இனுங்கொடுக்க வைத்திருக்கிறான். அந்த ரஹ்மத்து எவ்விதமானதென்றும் யாருக்குந் தெரியாது இன்னும் நம்மள் நபிநாயகம் பிறந்தவுடனே அல்லா சுபஹான ஹுத்தஆலா சொல்லுவான் வாரும் ஜிபுரீலே, என்னுடைய தோழராகிய நபிநாயகம் மக்கத்திற் பிறந்து யிருப்பதால் நீர் இப்போது சுறுக்காகப்போய் அவர்களை யெடுத்துவந்து சுவர்க்கலோகத்திற்கு கொண்டுபோய்ச் சுவர்க்கலோகங்களைச் சுற்றி பவனி வாருமென்று சொன்னான்.

அப்படிக்கு உடனே ஜிபுரீல் லலைஹிஸ்ஸலாம் நபிநாயகத்தை அவர் கையா லெடுத்துச் சுவர்க்க லோகத்துக்குக் கொண்டு போய்ச் சுவர்க்க லோகங்களைச் சுற்றிப் பவனி வரும்போது சுவர்க்கத்திலேயே யிருக்கப்பட்ட ஹூறுலிங்ப் பெண்கள் முத்தினால் ஆலாத்தியேந்தி சுபசோபனம் சுபசோபனமென்று சொல்லிச் சொல்லி ரொம்பவும் சந்தோஷங் கொண்டாடினார்கள். இன்னும் அந்த ஹூலிங்கப் பெண்கள் சொல்லுவார்கள் நபிநாயகமே, உங்களுடைய உம்மத்துகளைத்தானே எங்களுக்கு றஹ்மான் புருஷர்களாக ஆக்கி வைத்திருக்கிறான் எங்கள் புருஷன் மார்களாகிய பேர்கள் எங்களிடத்திற்கு எப்போ வருவார்களோ என்று சொல்லிச்சொல்லி ரொம்பவும் சந்தோஷமா யிருக்கும் போது அந்த நேரத்தில் றஹ்மான் சொல்லுவான் வாருங்கள் என்னுடைய பணிவிடைகள் கேட்கப்பட்ட மலக்குகளே என்னுடைய தோழராகிய நபிநாயகத்தைச் சுவர்க்கலோகத்தைச் சுற்றிப் பவனி வருவதால் எனக்கு ரொம்பவும் சந்தோஷங்களாகி விட்டது.

நீங்களிப்போது சுறுக்காகப்போய் என்னுடைய வைத்து மாலேத்திறந்து பாருங்கள் அனேகங்கோடி கோடிகளான நகைக னான ஆபரணங்களும் இருக்கும் அதுகளை நீங்கள் எடுத்து சுவர்க்கலோகத்திலே வாரி வாரி விடுங்களென்று உத்திரவு செய் தான் அதுபோலே மலக்குகள் வைத்து வாலேத்திறந்து அனேக மான பட்டுகளும் அனேகங்களான நகைகளான ஆபரணங்களை யும் எடுத்து வாரிவாரி சுவர்க்கலோகத்திலே சூரை சூரையாய் விட்டார்கள். அதுகளைச் சொர்க்கலோகத்திலே யிருக்கப்பட்ட ஹூறுலிங்கப் பெண்கள் கண்டு உனக்கு முந்தினது யெனக்கு முந்தினது யென்று வோடி வோடி அனேக விதங்களான பட்டு பட்டாவளிகளையும் அனேகவிதங்களான நகை ஆபரணங்களையும் ஓடி ஓடி யெடுத்துச் சொல்லுவார்கள். எங்கள் புருடமார்கள் எப்போ எங்களிடத்தில் வருவார்களோ நாங்கள் இந்த பட்டுகளை யும் உடுத்தி நகைகளான ஆபரணங்களையும் எங்கள் திரேகங்களி லணிந்து நாங்களும் அவர்களும் சந்தோஷமாக விளையாடிக் கொண்டிருக்கயென்று சொல்லிச் சொல்லி அவர்கள் அதுகள் யெல்லாவற்றையும் அவர்கள் வைக்கும்படியான இடங்களில் கொண்டுபோய் வைப்பார்கள் இப்பேர்க்கொடுத்த நிஃமத்துக ளெல்லாம் அல்லாஹுத்த ஆலா நமக்குத்தான் வைத்திருக் கிறான்

நீங்கள் பார்த்திருக்கப் பார்த்திருக்க அனேகம் அனேகம் பேர்கள் பேர்கள் அதிகமான திரவியங்களைச் சம்பாதித்து வைத் துக்கொண்டு அனேகவிதங்களான கிராம பூமி தோட்டங்களை வாங்கியும், இன்னும் சிங்காரிப்பான மெத்தை வீடுகளைக்கட்டியும் அந்த வீடுகளுக்கு நாற்காலி மெத்தை திண்டு தலேகாணி வெண் சாமரை ஊஞ்சல் வகையராக்கள் வைத்து ரொம்பவும் சுகங்களைக் கொண்டாடி இன்னும் ஆனை யேற்றம் குதிரைச்சவாரி பல்லாக்கு ஏறும்பவுசுகள் வண்டிச்சவாரிகள் ஆளடிமைகள் வைத்து ரொம்ப ரொம்ப சுகங்களைக் கொண்டாடினார்களே அவர்கள் கொண் டாடிய தோட்டம் கிராமம் பூமிகளெங்கே இன்னும் அவர்கள் கட்டிய மெத்தை வீடுகளெங்கே இன்னும் ஆனையேற்றம் குதி ரைச்சவாரிகளெங்கே இன்னும் பல்லாக்கு ஏறும் பவுசுகள் வண் டிச்சவாரிகளெங்கே ஆளடிமைக ளெங்கே இதுகளெல்லாம் நீங்க ளெல்லோரும் பார்த்திருக்க அதுகளெல்லாம் அழிந்து வீடு

களும் அழிந்து அவர்களு மழிந்து பனுவாகப்போய் விட்டது அதுகளும் உங்களுக்குத் தெரியவில்லையா ?

இத்துனியா வாகிறது நம்மள் விருந்தாளியாய் தந்த தலங்களாயிருக்கும் இந்த தலங்கள் நம்மளுக்கு யாதாமொரு சொந்தமில்லையே நம்மளுக்கு முந்தி அனேகமான வீரர்களும், அனேகம் பவுசு கொண்டாடியபேர்களும் இறந்து மண்ணென்னப்பட்ட அறைவீட்டுக்குள் அவர்கள் வந்து படுத்தது உங்களுக்குத் தெரியவில்லையா நம்மெல்லோரும் மவுத்தைவிட்டும் ஒருபோதும் தப்பிக்கப்போகிறதில்லை, நம்மள் கோடான கோடியான திரவியங்களைச் சம்பாதித்துக்கொண்டு அனேகவிதமான சொகுசுகளாக விருந்திட்டாலும் நம்மள் மவுத்தாயி அறை வீட்டுக்குள்ளேபோய் புகுதவேண்டியதே நல்ல அமல்களைச் செய்து நயங்களைப் பெற்றுக்கொண்டபேர்கள் சுவர்க்க வழியைக் காணப்படுவார்கள். கெடுதலையான செயல்களைச்செய்து அமல்களைப் பெறுதபேர்கள் மவுத்தானல் அவர்களை மண்ணென்னப்பட்ட அறை வீட்டுக்குள் அடங்கி ஏழுடியெடுத்து வைத்தபின் அவர்களுக்கு அங்கே நடக்கப்பட்டதென்னவென்றால் முன்கற நககீற என்னப்பட்ட மலக்கு யெவ்விதமாக வருவார்களென்றால்.

## தோங்கல்

நாண்டமுக நெருப்பாலே நான்முக மாகிவந்தால் அவர்கள்
நாவெலும்ப மாட்டாமல் நரகமது சேர்வார்

அவர்கள் நாலுமுக நெருப்பினாலேயும் அவர்கள் வாய் கீழுதடு கிழ்பூமியும் மேலுதடுவான உயரமாகவும் அதற்கு ஏற்ற பெருப்பமும் அதற்கேற்ற உயரமும் அதற்கேற்ற தலையுமாக வந்து அவர்கள் நெருப்பினால் கையில் பிடித்திருக்கும் தண்டாயுதத்தை மன்றப்புக்கயென்று வூன்றி அந்தந்த தடியினாலே ஓங்கி ஓங்கி அடிப்பார்கள் அந்த அடி அவர்கள்மேலே பட்டவுடனே பஞ்சுபோலே பறந்துபோய்விடுவார்கள். மறுபடியும் அவர்கள் பஞ்சுபோல் போனதை அவர்கள் கையினாலே திரட்டிப் பிடித்து கூட்டி ஒருபக்கம் வைத்து மறுபடியும் அவர்களை முன்போலே ஹயாத்தாக வைத்து மறுபடியும் அந்த நெருப்புத் தடியினாலே ஓங்கி அடிப்பார்கள்.

மறுபடியு முன்போலப் பஞ்சாகப் பறந்து விடுவார்கள் மறு படியும் அவர்களை அந்தப் பஞ்சைக் கூட்டித் திரட்டி முன் போலே ஹயாத்தாக வைத்துக்கொண்டு நெருப்புத் தடியினாலே வோங்கி அடிப்பார்கள்.

இந்தவிதமாக அவர்கள் 3 தரம் இந்தப்படிக்குச் செய்து விட்டு அவர்கள் திரும்பிப்போய் விடுவார்கள் கொஞ்சநேரம் சென்று சில மலக்குகள் அவர்கள் கிட்டே வந்து அவர்கள் கையி னால் பிடித்திருக்கும் நெருப்புத் தூண்டியை அவர்கள் தலைமேல் போட்டு கொளுவி ஒருத்தர் உசத்தே தூக்கிக்கொண்டேயிருப் பார்கள். இன்னுஞ் சில மலக்குகள் நெருப்பினாலே இரும்பு ஆணியெடுத்து அவர்கள் தலைமண்டையிலே குத்தி நெருப்பினால் சுத்தியில்கொண்டு ஓங்கி அடிப்பார்கள் அந்த அடியானது அவர் கள் மண்டையைப் பிளந்து நாக்கைப் பிளந்தும் வெளியே வந்து நிற்கும்.

இன்னும் சில மலக்குகள் நெருப்பினாலே சுக்குமா வென்ற தடியெடுத்து ஓங்கி யடிப்பார்கள் இன்னஞ்சில மலக்குகள் நெருப் புப் பத்துக்கொறடு கொண்டு அவர்களுடைய மேனி சரீரம் துடை இதுகளைப் பிடிங்கி இழுப்பார்கள். அந்த வேதனைகள் பொறுக்க ஏலாமல் சொல்லுவார்கள் அப்பா அம்மா இந்த வேதனைகள் பொறுக்க முடியவில்லையே யெங்களைக் கொஞ்ச நேரம் பூலோகத்துக்கு விட்டால் நாங்கள் வைத்திருந்த வீடு வாசல், தோட்டம், நகை, பணங்காசுகள் இதுகளெல்லா மெடு த்து, சக்காத்து சதக்காக்கள் கொடுத்து வீடுவாசற்களையும், தோட்டங்களையும் அனேகமாயிருந்தாலும் அதுகளை விற்றுப் புள்ளிவாசல்களையும்கட்டி யேழை மிசுக்கீன்களுக்குங் கொடுத்து விட்டு கொஞ்ச நேரத்திற்குள்ளாக நாங்கள் வந்துவிடுகிறோ மென்று சொல்லிச் சொல்லிக் கேட்டு ரொம்பவும் கெஞ்சிக் கெஞ்சி மலக்குகளிடத்தில் கேட்டு கேட்டு அழுவார்கள் அப் போது மலக்குகள் சொல்லுவார்கள்.

அடாபாவியான மூடர்களே, இதற்கு முந்தி உங்களுக்குப் புத்தி யெங்கே போய் விட்டது. அல்லாஹுத்தஆலா சொல்லிய

சொற்களையும் நபிநாயக மவர்கள் திருவாய் மலர்ந்தருளிய ஹதீதுகளையும் நீங்கள் எடுத்து நடந்தால் உங்களுக்கு இந்த அதாபு வரமாட்டாதே நீங்களும் சுகங்களான சுவர்க்கலோகத்தைப் பெற்றவர்களாக யிருப்பீர்களே நீங்கள் பூலோகத்தில் யிருக்கும்போது அல்லாஹுத்த ஆலா சொல்லிய சொற்களை யெடுக்காமலும் நபிநாயகம் அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய ஹதீதுகளைப் பேணுமலும் நீங்கள் பூலோகத்திலேயிருந்து உங்களுடைய விருப்வதுதூர்களால் நிக்ராகத்தோணுமல் உங்கள் பிரியப்படிக்கு கெட்டசெயல்களைச் செய்கிறதும், கள் சர்ராயங்களைக் குடிக்கிறதும், சனுக்கள் செய்கிறதும், வட்டிகள் வாங்குகிறதுமான இதுகளில் மிகுதமாயிருந்தீர்களே இப்போது எங்களிடத்தில் அகப்பட்டுக் கொண்டீர்களே நீங்கள் என்னமாய் அழுதாலும், யென்னமாய்க் கெஞ்சினுலும், மலைக்கல்லுக ளுருகி விட்டாலும் எங்களுடைய மனமானது ஒரு கடுகளவு மிரக்கம் வராது.

இப்போது நீங்கள் யென்னவிதமாய்க் கெஞ்சி அழுதாலும் நாங்கள் உங்களை விட்டுவிடப் போகிறதில்லை புலியின்கிட்டே மான்குட்டியானது வந்தால் தப்பித்துப் போய்விடுமா, அதைப் போல நீங்கள் எங்கள் கிட்டேவந்து அகப்பட்டுக் கொண்டீர்களே ஒருபோதும் உங்களை நாங்கள் விடப்போகிறதில்லை என்று சொல்லி இந்த அதாபுகள் உங்களுக்கு பத்தாது யென்று அவர்களை யெடுத்து நரகமென்னப்பட்ட கொடூரமாகிய தலத்தில் கொண்டு போய் விடுவார்கள். அந்தத் தலத்தி லிருக்கப்பட்ட பாம்புகள் யாராலேயுஞ் சொல்லக்கூடும். அந்தத் தலத்திலிருக்கப்பட்ட நெருப்பு ஒரு கடுகு அளவில் பூமியில் தவறிவிட்டால் பூமிகளெல்லாம் வெந்து சாம்பலாகிப் போய்விடும் இன்னும் அதுகளிலே யிருக்கப்பட்ட தேள் கொஞ்சம் பூமியை கொட்டினுல் அந்த விஷம் பட்டவுடனே தண்ணீராகிப்போய்விடும் இதைப் போலே ஆயிரம்பங்கு அதிகமான சில பாம்புகள் அதிலே யிருக்கும்.

நரகவாதிகளை அந்த தேள்கள் கொட்டவும் பாம்புகள் கொத்திக்கொத்தி அவர்களுடைய சதைகளைக் கடித்துக் கடித்து பிடுங்கிப் பிடுங்கி வேதனைகள் செய்துக்கொண்டு எந்நேரமும்

நரகவாதிகளை இம்சைப்படுத்திக்கொண்டே யிருக்கும். இன்னும் ஆலிம்களென்றும் உலமாக்களென்றும் சொல்லப்பட்ட பொருவானது சொன்னசொல்லைச் சொல்லப்பட்ட பேர்கள் அதாவது அல்லாஹுத்த ஆலா சொல்லிய சொல்களைச் சொல்லி வேதங் கட்டளைகளை மனிதர்களுக்குப் புகட்டி வைக்கும்படியான பொருளாயிருக்கும் அவர்கள் சொல்லுகிறது ஒரு அணுவளவில் பிசகில்லாத சொற்களா யிருக்கும் அல்லாஹுத்தஆலா வேதங்களில் சொல்லப்பட்ட சொற்களைத் தான் சொல்லுவார்கள் நம்மள் நபி நாயகம் றசூல் சல்லல்லாஹு அலைஹிவ சல்லம் திருவுளமாயிருக்கிறார்கள்.

முமீன்களே, நீங்கள் பிற்காலம் ஆலிம்களுக்கு சங்கைசெய்தால் யெனக்குப் பத்துபங்கு சங்கைசெய்த மாதிரிகளாயிருக்குமென்றும் திருவுளமா யிருக்கிறார்கள் நீங்கள் ஆலிம்களுக்கு ரொம்பவும் சங்கை செய்ய வேண்டியது. நீங்கள் பூலோகத்திற்கு வரும்போது பணங்காசுகளைக் கொண்டுக் கொண்டுவந்த பேர்களில்லையே நீங்கள் பூலோகத்தை விட்டுப் போகும்போது பணங் காசுகளைக் கொண்டு போகிறதில்லையே நன்மையைச்செய்து பெற்றுக் கொண்டுபோனால் நல்வழியென்ற சுவர்க்கபதி யடைவீர்கள் தின்மையைச்செய்து பெற்றுக்கொண்டு போனால் நரகமென்னப்பட்ட கொடூரமான பதவியை யடைவீர்கள் அப்படிக்கு வீணாகப் போகாமல் அல்லாஹுத்த ஆலா சொல்லிய சொற்களையும் நம்மள் நபிநாயகம் அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய ஹதீதுகளையும் நீங்கள் உணர்ந்து பயந்து நடக்கவேண்டியது. முதலாவது தொழுகையாக விருக்கும் யாதாமொருவன் தொழுகையை விட்டு யிருந்து அவர்கள் அனேகங்களான கொடைகள் கொடுத்திட்டாலும் அனேகங்களாக சக்காத்து சதக்காக்கள் கொடுத்திட்டாலும் அவர்கள் கொடுக்கப்பட்ட கொடைகள் ஒன்றும் கபூலாகமாட்டாது.

எல்லாவணக்கத்துக்கும் முதலாவது தொழுகையா யிருக்கும் தொழுகையை விட்டவனுக்கு ஒரு பதவியுங் கொடுக்கப்படமாட்டாது. தொழுகை யில்லாதவனுடைய வணக்கம் ஒன்றும் கபூலாகமாட்டாது. தொழுகையைவிட்டு யிருப்பானாகில் அவன் நபிநாயகம் உத்மத்துகளை விட்டும் இபுலீசுடைய மக்களாகிப்

போய்விடுவான் தொழுகையை விட்டவனுக்கு ஒருபோதுங் கெதி கிடையாது யாதாமொருவன் தொழுகையை விட்டு யிருப்பானாகில் அவர்களெல்லோர்களையும் இபுலீசுமக்களென்றுஞ் சொல்லப்படும். கின்வஸீரென்றுஞ் சொல்லப்படும் பன்றி யென்றுஞ் சொல்லப்படும் ஜாஹிலென்றுஞ் சொல்லப்படும் முனுபிக்கென்றுஞ் சொல்லப்படும் மூதேவியென்றுஞ் சொல்லப்படும்.

தொழுகாதவன் மவுத்தானால் அவனைத் தொட்டுக் குளிப்பாட்டினால் பாவியாகப் போய்விடுவார்கள். அவனையடக்கினாலும் ஹீஞ்சராகப் போய்விடுவார்கள் இந்தப்படிக்கு திட்டவட்டமாக நம்மள் நபிநாயக றசூல் சல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் திருவாய் மலர்ந்தருளி யிருக்கிறார்கள். இந்தப் பூலோகமாகிறது ஒரு அற்பநேரத்து வாழ்வும் நம்மள் விருந்தாளியாய் வந்த தலங்களாகவுமிருக்கும் இந்த வாழ்வை நீங்கள் எப்பவும் சதமென்று நம்பவேண்டாம் நம்மளுக்கு மவுத்தென்னப்பட்ட மாலை ஒன்று நம்மள் கழுத்தில் கிடக்கிறது நம்மளுக்கு இன்னநேரத்தில் மவுத்து வருமென்று என்ன நம்பிக்கைகளிருக்கிறது அதுகளை நீங்கள் கொஞ்சமாவது எண்ணாமல் மறந்துவிட்டு அமல்களைச் செய்யாமல் வீண்காலம் போக்கிக்கொண்டிருக்கிறீர்கள்.

அப்படிக்கு நீங்கள் வீண்காலம் போக்கினால் நல்ல வழியென்ற அமலை யெப்போதான் செய்கிறது நீங்கள் 'மவுத்தானீர்களானால் பணங்களெங்கே வீடுவாசல் தோட்டங்களெங்கே கிருமம் பூமிகள் குதிரைச் சவாரிகளெங்கே இன்பம் சுகங்களோடு அனுபவித்த பெண்சாதிபிள்ளை குட்டிகளெங்கே மெத்தை திண்டு தலைகாணி சொகுசான உடுப்புகள் சமுக்காளம் விரித்து அனுபவித்த விடங்களெங்கே ஆளடிமை வைத்து ஏறிய வண்டிச் சவாரிகளான வாகனங்களெங்கே நீங்கள் ரொம்பவும் துப்புரவாக உடுத்திய உடுப்புகளெங்கே இதுகளெல்லாம் அழிந்து பணவாகிப் போய்விடும்.

இதுகளெல்லாம் உங்களுக்கு ஒரு அணுவளவும் உங்களுடன் வரமாட்டாது நீங்கள் செய்கின்ற நல்ல நடத்தையான நல்ல அமல்கள் தான் உங்களுக்கு முன்னேவந்து சுவர்க்கலோகத்திற்கு வழிகாட்டி வைக்கும் இந்த பூலோக வாழ்வைச் சதமென்று நம்பி அந்த ஜஹன்னத்தில் முழுகிடவேண்டாம் உங்களிடத்தில் பணங்

காசுக ளிருந்தால் உங்களாலியன்ற மட்டுக்கும் அல்லாவுடைய வீடாகிய பள்ளிவாசல்களைக் கட்டுங்கள் சக்காத்து சதாக்கள் கொடுத்து பசியாற்றுங்கள் எல்லாவுயிர்களையும் தன் உயிர்போ லெண்ணிப் பாதுகாருங்கள் றமலான் மாதத்தில் முப்பது நோன்புகளைப் பிடித்து ஏழைக்கு மறுகளைக் கட்டுங்கள் சாராயம் ஜனுவட்டி இவைகளை விலக்கிலேனென்ற சொல்லை நீக்குங்கள் நீங்கள் நல்வழியென்ற செயலை றஹ்மானெடுத்துக்கொண்டு உங்களுக்கு கூலிகொடுக்கப்படும்.

அந்தக்கூலி யெவ்விதமான தென்றுல் ஏழாவது சுவர்க்க லோகத்தில் மகா நவநீதம் அழகுவடிவு ஒளிவு பொருந்திய 70 வீடு கொடுக்கப்படும் ஒவ்வொரு வீடுகளில் நூறு நூறு ஹறுறுலிங்கப் பெண்களையும் கொடுக்கப்படும். அந்தந்த வீடுகளில் நீங்கள் போயிருந்து மகா மதுரமுள்ள உணவுகளருந்தி நீங்களும் ஹறுறுலிங்கப் பெண்களும் மஹா சுகங்கள் அனுபவித்து மவுத்தில்லாமல் அந்தவிடத்தில் நெடும் ஊழி ஊழி காலம் வரைக்கும் தரிபாடா யிருப்பீர்கள். யாராவது பணங்களை அதிகமாகச் சேகரஞ் செய்து வைத்துக்கொண்டு தொழாமலும் நோன்பு பிடியாமலும், சக்காத்து சதக்காக்கள் கொடுக்காமலும், யீகை யிரக்கமில்லாமலும், அல்லாவுடைய வீடாகிய பள்ளிவாசல்களுக்கு வந்த ஏழை மிசுக்கீன்களை விசாரியாமலும், அல்லாவுடைய வீடாகிய பள்ளி வாசல்களைக் கட்டாமலும் தானிருக்கும் படியான நல்ல மாதிரியான வீடுகளைக் கட்டியும் அதில் மெத்தை திண்டு தலைகாணி ஓலுகு வெண்சாமரை கட்டில் ஊஞ்சல் இந்த வகையராக்களை வைத்து சுகங்களனுபவித்து அந்த சாகரத்தில் முழுகி மவுத்தானல் அவன் மூதேவியாகிய நரக மென்னப்பட்ட ஓடையில் அவனைக் கொண்டுபோய் விடப்படும்.

அங்கே நெருப்பு என்னப்பட்ட தண்ணீரை சபானியாக்களென்ற மலக்குகள் வாரிவாரி அவன் வாயில் ஊற்றிக்கொண்டேயிருப்பார்கள். இன்னம் அந்த ஓடையில் மலைபோல் நெருப்பினல்

இருக்கப்பட்ட பாம்புகள்வந்து அவன்மேல் தொடை, சரீரம்,முகம், கை, கால் இதுகளைக் கடித்து பிடுங்கி கடித்து உதறிக்கொண்டே நிற்கும் இன்னுஞ் சில மலக்குகள் வந்து நெருப்பினால் இரும்புச் சங்கிலி கொண்டுவந்து அவனுடைய காலிரண்டையும் கட்டிக்குப் புறக் கவிழ்த்தி பரபரவென்று இழுத்துக்கொண்டே யிருப்பார் கள். இந்தப்படி அவன் ஊழி யூழிகாலம்வரைக்கும் அந்த ஓடைக் யிலே அழுந்தி தரிபாடாக யிருப்பான் அல்லாஹுத்த ஆலா சொல்லிய சொற்களையும் நபிநாயகம் அவர்கள் சொல்லிய சொற் களையும் நீங்கள் பேணுதலாக எடுத்து நடந்து வந்தால் நல்வழி யென்ற சொர்க்கபதவி யடைவீர்கள் ஆமீன் ஆமீன் யாறப்பல் ஆலமீன்.

ஞான சொர்க்கபதி முற்றிற்று.

---



பிஸ்மில்லாஹி.

இஃது

# ஆதுமகன் சத்தாது

## சுவர்க்கங்கட்டிய கிஸ்ஸா

—(*)—

அவன் தாயார் வயிற்றில் கெர்ப்பங்களாயிருக்கும்போது அந்த பெண்பிள்ளையும் இன்னஞ் சிலபேர்களுமாக கப்பலில் ஏறிப்போனார்கள். அந்த நேரத்தில் காற்று அடித்து கப்பல் உடைந்து போய்விட்டது அதனால் அநேக ஜனங்களெல்லாம் இறந்துபோய்விட்டார்கள். அப்போது இந்த பெண்பிள்ளைக்கு ஒரு பலகைவந்து எதிர்ப்பட்டது அந்த பலகையில் இந்த பெண் பிள்ளை உட்கார்ந்துக் கொண்டே யிருந்தாள் அந்த நேரத்தில் உடனே அந்தப் பெண் பிள்ளைக்கு இடுப்பு வலி உண்டாகி பிள்ளை பிறந்துவிட்டது மாவுங்கொடியும் வராமல் அவள் வயிற்றில் இருக்கும் நேரத்தில் அல்லா சுபுஹானஹுதஆலா இசுறுயீல் அலைஹிசலாத்தை கூப்பிட்டு ஓ இசுறுயீலே நீர் சுறுக்காகப்போய் அந்தப் பலகையின்மேல் இருக்கப்பட்ட பெண் பிள்ளையுடைய றுஹை வாங்கி வாருமென்று சொன்னான் அப்போது இசுறுயீல் அலைஹிஸ்ஸலாம் சுறுக்காகப் போய்ப் பார்த்தார்கள் பிள்ளை பிறந்து இருக்கிறதையும் அந்த பெண்பிள்ளை வயிற்றில் மாவுங் கொடியும் வராமல் வயிற்றில் இருக்கிறதையும் பார்த்து அவர்கள் ரொம்ப இரக்கப்பட்டு மறுபடியும் அந்த ரஹ்மான் இடம்போய் ரஹ்மானே நான் போய் பார்த்தேன் ஒரு பலகை துண்டில் பிள்ளை பிறந்து இருக்கிறதையும் அந்த பெண் பிள்ளை வயிற்றில் மாவுங்கொடியும் வராமல் இருக்கிறதும் நான் பார்த்து இரக்கப்பட்டு உன்னிடத்தில் சொல்லவந்தேன் என்று சொன்னார்கள் அப்போது ரஹ்மான் சொல்லுகிறான். ஓ இசுறுயிலே அதற்கு நீரோ நானோ இப்போ நீர் சீக்கிரமாகப்போய் அந்த பெண்பிள்ளையுடைய றுஹை வாங்கி வாருமென்று சொன்னான் மறுபடியும் இசுறுயீல் அலைஹிஸ்ஸலாம் வந்து அந்தப்

பெண்பிள்ளையுடைய றூஹை வாங்கிக்கொண்டு போனார்கள் அப்போது அந்த பெண்பிள்ளை தவறி கடலில் வீழ்ந்து விட்டாள்.

அந்தப் பிள்ளை பலகைமேல் இருந்தது கடல் அலைக்கி அலை அந்த பலகை அசைத்து அசைத்துக்கொண்டே வந்து கரை ஓரமாக கிட்டேவரவும் ஒரு பெரிய காற்று வந்து அடித்து பலகையை தூக்கி கடற்கரை மண்ணில்போட்டு விட்டது. அப்புறம் 4 நாளைக்கி முந்தி ஒருபுலி குட்டிபோட்டு அந்த புலிக்குட்டி செத்துப்போய்விட்டது அந்த புலிக்கி பால்முறுகி வேதனை பொறுக்கமாட்டாமல் மாரை காடுகளிலேயே உரசிக்கொண்டே வந்தது இந்த பிள்ளை இருக்கும் வாய்க்கி நேராக ஒருசெடி 2 கவட்டையாக விரித்துக் கொண்டிருந்தது அந்த கவட்டையில் இந்தப்புலி மாரைவைத்து தேய்த்தது அந்தக் கவட்டைக்கு நடுவில் இந்தப் பிள்ளை வாயைத்திறந்துக் கொண்டிருந்தது அதினுடைய முலைக்காம்பு அந்தப் பிள்ளையினுடைய வாயில் பட்டது அப்போது அந்த பிள்ளை வாயைத்திறந்து புலியின் முலைக்காம்பைப் பிடித்து சுவைக்க சுவைக்க புலிக்கி ரொம்பச் சுகமாயிருந்தது வேதனைகளெல்லாம் நீங்கிவிட்டது புலி வெகு நேரமட்டும் பிள்ளைக்குப் பால்கொடுத்துக் கொண்டே யிருந்தது அப்புறம் புலி காட்டுக்குப்போய் விட்டது.

மறுபடியும் புலிக்குப் பால் கட்டினவுடனே பிள்ளைக்கு வந்து பால் கொடுக்கிறது இப்படிக்கு தினந்தோறும் பிள்ளைக்கு வந்து பால் கொடுத்துக்கொண்டே யிருந்து பிள்ளையும் 40 நாளுக்குள்ளாக ஒரு வருஷம் ஒண்ணரை வருஷத்து பிள்ளையைப் போலாகி விட்டது அந்தப்பலிகூட இந்தப் பிள்ளையும் காட்டுக்கு கூட தொடர்ந்து போகிறது புலி 10 அடி பாய்ந்தால் பிள்ளை 16 அடி பாய்கிறது இவ்விதமாக அந்தப்பிள்ளை புலிகூட அந்தக்காட்டில் திரியுங்காலத்தில் ஒரு நாள் அந்த ஊர் இராஜாவிடத்தி லிருக்கப்பட்ட வேடர்கள் அந்தக்காட்டுக்கு வேட்டையாட வந்தார்கள் காட்டில். வேட்டைமான் மரை முசல் இதுகளை யெல்லாம் பிடித்துக்கொண்டு வரும்போது அவர்கள் வருகிறவழியில் புலித்தடமும் பிள்ளைத்தடமும் ஒன்றாக நெருங்கி யிருக்கிறதைக் கண்டு அந்த வேடர்கள் இதென்ன அதிசயம் இந்தக்காட்டில் புலித்தடமும் பிள்ளைத்தடமும் ஒன்றாக யிருப்பதை நம்ம ராஜாவிடத்தில்

சொல்லவேணுமென்று வந்து இவர்கள் வேட்டையாடிய சாமான் களெல்லாம் ராஜா முன்னில் வைத்து இவர்கள் சொன்ன தாவது ஓ இராஜாக்களே இப்போ இந்தக்காட்டில் நாங்கள் ஒரு அதிசயங்கண்டோம் அது யெங்களுக்கு ரொம்ப புதுமையாக இருக்கின்றது அந்தச்சேதியைத் தங்களுக்கு சொல்ல வந்தோம் என்று சொன்னார்கள் அதுயென்ன புதுமையென்று ராஜன் கேட்டான்.

அப்போது அவர்கள் சொல்லுவார்கள் நாங்கள் காட்டில் வேட்டையாடித் திரும்பி வரும்போது இந்தக் காட்டுக்கு நேராக வருகையில் பிள்ளைத் தடமும் புலித்தடமும் ஒன்றாக நெருங்கி யிருக்கிறது நாங்கள் அதைக்கண்டு ரொம்பப் புதுமைபபட்டு இச் சேதியைத் தாங்கள் இடத்தில் சொல்லவேணுமென்று வந்தோம் என்று சொன்னார்கள். அந்தச் சேதியை ராஜா கேள்விப்பட்டு ரொம்ப ஆசையாய் புதுமைப்பட்டு ஓ வாருங்கள் காட்டில் வேட்டையாடும் வேடர்களே! நீங்கள் இப்போ ஒரு நாழிகையில் ஆயிரம்பேர்கள் போய் அந்தக் காட்டைச்சுற்றி உருக்கு வலைகளை வீசிப் புலியையும் அந்தப் பிள்ளையையும் பிடித்துக்கொண்டு வாருங்களென்று சொன்னான். அதுகேட்டு வேடர்கள் ஆயிரம்பேர்கள் காட்டுக்குப்போய் வலைகளை காட்டில் இடமில்லாமல் கட்டி காட்டைக் கலைத்தார்கள். அப்போது புலியும், பிள்ளையும் இந்த வலையில் அகப்பட்டுக் கொண்டது புலியானது வலையை பிச்சுக்கொண்டு போய்விட்டது. பிள்ளை வலையில் அகப்பட்டுக் கொண்டது அந்த வேடர்கள் ஓடிப்போய் பிள்ளையை யெடுத்து வந்து ராஜா இடத்தில் கொண்டு வந்து கொடுத்தார்கள்.

அந்த ராஜா ரொம்பவும் புதுமைப்பட்டு பிள்ளையை ரொம்ப பிரியமாகத் தூக்கி மடியில் வைத்துக்கொண்டு நல்ல மதுரமுள்ள சோறுகளாக தின்னக் கொடுத்தான் அந்தப் பிள்ளை சோறு தின்க வில்லை மறுபடியும் வாழைப்பழம், மாம்பழம் இன்னுஞ் சில கனிவர்க்கங்களையும் தின்கச்சொல்லி கொடுத்தான். அதுகளையும் அந்த பிள்ளை தின்கவில்லை. ராஜா ரொம்ப விசாரப்பட்டு இதற்கு யென்ன யோசனையென்று ஆலோசித்து நல்ல பணுதி செய்யப் பட்ட தச்சர்களைக் கூப்பிட்டு ஓ தச்சர்களே, நீங்கள் இப்போது ஒரு நாழிகைக்குள்ளாக பெரிதாக கிளிக் கூண்டைப்போலே 40-கூடுகள் செய்யுங்களென்று உத்திரவு செய்தான்.

அதுபோலவே அவர்கள் 40-கூடும் செய்துகொடுத்தார்கள் 30-கூட்டை சுத்தி வரவைத்து நடுவில் ஒரு கூட்டை வைத்தான் நடுக்கூட்டலிந்தப் பிள்ளையை ஒரு கூட்டில்வைத்து மற்ற கூடுகளில் ஒன்றொன்றுக்கு ஒவ்வொரு சிறுபிள்ளையாக வைத்து அந்தப் பிள்ளைகளுக்கு சோறுகளும் அநேகமான கனிவர்க்கங் களும் முன்னாலே வைத்தான் அந்தப் பிள்ளைகள் சோறு தின்கிற தைப் பார்த்து இந்தப் பிள்ளையுந் தின்னும் அந்தப் பிள்ளைகள் கனிவர்க்கங்கள் தின்கிறதைப்பார்த்து இந்தப் பிள்ளையும் தின்னும் அப்புறம் கொஞ்சநாளைக்குப் பிறகு அந்தக்கூட்டைவிட்டு வெளிப்படுத்தி ரொம்ப அருமையாக வைத்து வளர்த்தான் பிள்ளையும் பெரிதாகிவிட்டது. இந்தப் பிள்ளையின்கூட மூற்றப்பிள்ளை 39-பிள்ளைகளுங் கூடதிரிகிறது அப்படிக்கிருக்கும் நாளையில் பிள்ளைக்கு 16 வயதாகிவிட்டது.

அவன் வில்லம்பு சரிக்கட்டி எந்நாளும் அவன் அந்த வில்லை யெடுத்துக்கொண்டு இந்த 39-பிள்ளைகளையும்கூட கூட்டிக்கொண்டு காட்டுக்குப்போய் வேட்டையாடுகிறது யெந்தந்த மரமும் யெவ்வளவு உயரங்களாக இருந்தாலும் அந்தந்த மரங்களிலே இருக்கப்பட்ட சாரங்களை அவன் கையில் உருண்டையால் ஒரே தெரியாக தெரிப்பான் இன்னும் சொல்லுவான் அடே இதோ பாருங்கள் அந்த பக்கிசாரத்து கொண்டு பார்த்து தெரிக் கிறேன் யென்று சொல்லித் தெரிப்பான் அதுபோலே அந்தவில் உருண்டை அந்த பக்கிசாரத்தின் சுண்டில்பட்டு கீழேவிழும். இன்னும் சொல்லித் தெரிப்பான் அடே இதோபார் அந்த பக்கி சாரத்தின் நெஞ்சுக்கு தெரிக்கிறேன் என்று சொல்லி தெரிப் பான் அதுபோலே அந்தவில் உருண்டை பக்கிசாரத்தின் நெஞ் சில் பட்டு கீழேவிழும். இந்த மாதிரியாக அவன் வைத்த குறிப் புத்தப்பாமல் அந்தக்காட்டில் வேட்டையாடிக்கொண்டு திரியுங் காலத்தில் ஒரு நாள் காட்டுக்கு வேட்டையாடப் போனான்.

அந்த நேரத்தில் ஒரு மரத்தின்மேல் ஒரு புரு இருந்து கூவிக்கொண்டிருந்தது இவன் கையில் வில்லெடுத்து மடியில் போட்டிருக்கும் உண்டை ஒன்றெடுத்து அந்தப் புருவைப்பார்த்து தெலித்தான் அந்த உருண்டை புருவின்மேல் படவில்லை பின்னையும் அந்த புரு மரத்தின்மேல் கூவிக்கொண்டே யிருந்தது. இவன் யெண்ணியது நம்மள் இதுவரையிலும் வைத்த குறிப்புத

தப்பவில்லையே யென்று வில்கயற்றை ஒருதரம் இழுத்துபபார்த்து மறுபடியும் ஒரு உருண்டையெடுத்து தெரித்தான் அந்த உருண்டையும் புறுவின்மேல் படவில்லை. ஆகா இதென்ன புதுமையாக இருக்கிறதென்றெண்ணி வில்லில் போட்டிருந்த கயற்றைக் கழட்டி இழுத்துப்பார்த்து அதுக்கு நல்ல மெதுக்களும் கொடுத்து மறுபடியும் கயற்றை வில்லில்போட்டு ஒரு உருண்டையை எடுத்துத் தெரித்தான். அந்த உருண்டையும் அந்தப் புறுவின் மேலே படவில்லை. அந்தப் புறுவும் கூவிக்கொண்டேயிருந்தது. இவன் ரொம்பவுங் கோபமாகி 3-உருண்டையும் தப்பிப்போய் விட்டதே என்று எண்ணி அந்த வில்கம்பை இரண்டாகமுறித்து கீழே யெறிந்துபோட்டு சொல்வான் ஓ வாருங்கள் ஓட்டர்களே நீங்கள் இப்போது வீட்டிற்குப்போய் அரை நிமிஷத்துக்குள்ளாக 1000-மண் வெட்டி 1000-கோடாலி 1000-கூந்தாலி 1000-கத்திகள் யெடுத்துவந்து இந்தமரத்தை வேரோடு பிடிங்கி எறிந்துவிட்டு அந்த மரம் நின்ற இடத்தைச் சுத்திபறித்து பாருங்கள் என்றுங் கட்டளையிட்டான்.

அதுபோலவே அவர்கள் வீட்டிற்குப்போய் இந்த சாமான்களை யெல்லாம் கொண்டுவந்து இந்த மரத்தை வெட்டி வேரோடு பிடிங்கி தூரத்திலே யெறிந்துவிட்டு அந்தமரம் நின்ற இடத்தை வெட்டிப் பார்த்தார்கள். அங்கே ஒரு தெப்பக்குளம் ஒன்றிருந்தது அந்தத் தெப்பக்குளத்துத் தண்ணீர்களை யெல்லாம் இறைத்துப் பார்த்தார்கள். அந்தத் தெப்பக்குளத்துக்குள்ளே ஒரு கிணறு ஒன்றிருந்தது அந்த கிணற்றுக்குள் இருந்த தண்ணீர்களை யெல்லாம் இறைத்துப் பார்த்தார்கள். அங்கே ஒரு பெட்டகம் ஒன்றிருந்தது அந்தப் பெட்டகத்தை உயர எடுத்துத் திறந்து பார்த்தார்கள் அதுக்குள்ளே தயிலாப்பெட்டி ஒன்றிருந்தது. அந்தத் தயிலாப்பெட்டியைத் திறந்துபார்த்தார்கள். அதனுள் செப்பொன்றிருந்தது. அந்த செப்புக்குள் ஒரு சிமிழ் ஒன்று இருந்தது அந்தச் சிமிழுக்குள் ஒரு வெள்ளிச் சிமிழ் ஒன்று இருந்தது அந்த வெள்ளிச் சிமிழுக்குள் ஒரு தங்கச்சிமிழ் ஒன்றிருந்தது அந்தத் தங்க சிமிழுக்குள் ஒரு வயிரம் அழுத்திய சிமிழ் ஒன்றிருந்தது அந்தச் சிமிளைதிறந்துபார்க்க மை ஒன்றிருந்தது அந்த மையை கொஞ்சம் யெடுத்து அவன் கையில்போட்டுப் பார்த்தான் அவனுக்குத்தெரியப்பட்டது அது சுகுறுசு சொர்க்

கம் நரகம் இன்னும் 10,000-ஆலமும் அவனுக்குச் சமீபமாகத் தெரியப்பட்டது.

அவன் எல்லா அதிசயங்களையுங்கண்டு இந்த சுவர்க்கலோகம் யேழையும் நம்மள் கண்ணால் பார்த்தோம் நம்மள் இதுக்குமேல் அதிகமாக சுவர்க்கலோகங் கட்டவேணுமென்று யெண்ணி ரொம் பவும் ஒரு விஸ்தாரமான யிடத்தைத் திட்டப்பண்ணி அந்த இடத்தில் கட்டவேணுமென்று இதுக்கு கல்லுகள் கிடையாது யென்று சொல்லி விசாரமாக இருக்கும் நேரத்தில் றஹ்மான் ஜிபுரீல் அலைகிஸ்ஸலாக்கைக் கூப்பிட்டுச் சொல்லுவான் வாரும் ஜிபுரீலே ஆதுமகன் சத்தாது பூலோகத்தில் சுவர்க்கலோகங் கட்ட நாடி தக்கபடிக்கு கல்கள் கிடைக்காமல் விசாரமாக இருக்கிறான். நீர் சுவர்க்க லோகத்தில் இருக்கப்பட்ட கல்களை யெடுத்து விய பாரியைப்போலே கொண்டுபோய் நீர் அவனிடத்தில் கொடும் அவன் நீர்கேட்ட துகையைக் கொடுப்பான் அந்தப் பணங்களை நீர் வாங்கி ஆற்றில் யெறிந்துவிட்டு வாரும் யென்றும் சொன் ஞன். அதுபோலவே அவர்கள் சுவர்க்கலோகத்தில் இருக்கப் பட்ட கல்களைக் கொண்டுபோய் விலைபேசுவார்கள் இவர்கள் கேட்டதுகைக் கொடுத்து கல்களை வாங்குவான் அந்தப் பணங் களை அவர்கள் வாங்கி ஆற்றில் யெறிந்துவிட்டுப் போய்விடுவார் கள்.

இந்தப்படியாக அவர்கள் கல்கள் கொண்டுவந்து கொடுக்க அவன் வாங்கி நல்லபணிதி செய்யப்பட்ட தச்சர்களைச் சேகரஞ் செய்து 100 பேர்பணிதி செய்யப்பட்ட தச்சர்களுக்கு ஒருவர் களே எசமானுகவும் 1000-பேர்களுக்கு 100-பேர் எசமானுகவும் இந்தப்படிக்கி பணிதி செய்யப்பட்ட பேர்களாக 18-லட்சம் பேர் களுக்கு உத்திரவுசெய்து யெண்பதினுயிரம் பேர்களை எசமானுக நேமித்து யெடுபிடிக்கி நல்ல ஆள்களாக 12-லட்சம் பேர்களாகத் தெரிந்து யெடுத்து அந்த 12-லட்சம் பேர்களுக்கும் உத்திரவு செய்து நேமித்து ஒரு மாதத்தில் நடக்கும்படியான வேலைகளை 10-நாளையில் நடக்கும்படி உத்திரவு செய்தான் அதுபோலே அவர்கள் வீடுகள் ரொம்ப நவநீதமாகக் கட்டினுர்கள். இன்னம் அவன் அந்தமை யெடுத்து கையில் போட்டு பார்த்தால் பூமி களில் இருக்கப்பட்ட புதையல்களெல்லாம் அவனுக்குத தெரி

யும் அதுக்ளேயும் வெட்டி வெட்டி யெடுத்து சிலவு செய்வான் இன்னமும் அந்தமை யெடுத்து அவன் கையில் போட்டு பார்ப் பான் தங்கமலே வெள்ளிமலே பொன்மலே இதுகள் இருக்கும் இட ங்களெல்லாம் அவனுக்குத் தெரியவரும் அதுகளேயும் ஆள்களே விட்டுவெட்டி யெடுத்து சிலவு செய்வான் இந்தப்படியாக அனேக விதமான பணிதிகளாக அந்தயிடத்தில் வீடுகள் செய்து அந்த வீட்டுக்குத் தலேவாசல் மேற்படி அகப்படாமல் அவன் ரொம்ப விசாரப்பட்டுக்கொண்டு இருக்கும் நேரத்தில் றஹ்மான் சொல் லுவான் வாரும் ஜிபுரீலே அவனுக்கு வாசல் மேற்படி யில்லாமல் ரொம்ப கவனமாக யிருக்கிருன். நீர் இந்தபடியைக் கொண்டு போய் விலேகூறும் அவன் ஒடிவந்து கேட்பான் நீர் சொன்ன விலே யைக் கொடுத்து வாங்குவான் என்று உத்தரவு செய்தான்.

அதுபோல் அவர்கள் படியை எடுத்துக்கொண்டு அவனிடம் வந்து விலேகூறுவார்கள் அவர்கள் விலேசொன்ன பிரகாரம் அவன் துகையைக்கொடுத்து வாங்கிக்கொண்டுபோய் அந்த மேல்படிக்கி மேலே கொண்டுபோய் வைத்துப்பார்ப்பான். நூல் போட்டது போல் சரியாக யிருந்தது. அவன் ரொம்ப சந்தோஷப்பட்டு ரொம்ப விஸ்தாரமாக ஒரு தங்க பலகைசெய்து அதில் எழுதி யுது என்னவென்ருல் ஆதுமகன் சத்தாது கட்டின 8-வது சுவர்க் கம் ஜெனனத்தில் பிருதவசு யென்றும் சொல்லப்படும் என்று அந்தப் பலகையில் யெழுதி அந்த வாசல் முகப்பில் பதித்து வைத்தான் பின்னுடி அவன் யெண்ணியது இனி நம்மள் சுவர்க்கலோகத்துக்குள்ளே போய் ஊழி ஊழிகாலம் வரையில் மவுத்து யில்லாமல் சுபசோபனங் கொண்டாடிக்கொண்டே இருக்கவேணுமென யெண்ணி தன்னுடைய காலால்களேக் கூப் பிட்டுச் சொல்லுவான் நான் காளே வாகனத்திலேறி நம்மள் ஊருகளெல்லாம் சுத்திவந்து நம்மள் கட்டிய சுவர்க்கலோகத்துக் குப் போகவேணும் நீங்கள் நம்மள் மாட்டு மந்தையில் போய் ரொம்பவுந் திரமான மாடாகப்பார்த்து ஒன்று பிடித்து வாருங்க ளென்று உத்திரவு சொன்னுன்.

அதுபோல அவர்கள் மாடுபிடிக்க மாட்டு மந்தைக்குப் போனுர்கள். அப்போது அல்லாஹு¯த்த ஆலா இசுருயீல் அலே கிஸ்ஸலாம் அவர்களேக் கூப்பிட்டு சொல்லுவான் வாரும் இசுரு

10

யீலே நீர் இப்போது சுருக்காகப்போய் காளை வாகனம் வடிவு யெடுத்து அந்த மாட்டு மந்தையில் போய் நில்லும் அவர்கள் எல் லோரும் மாட்டைப் பார்ப்பார்கள். அவர்களுக்கு ஒன்றும் பிடி யாது நீதான் அவர்களுக்கு மனம் பிடிக்கும் அவர்கள் உம்மைக் கண்டவுடனே இந்த மாடு ரொம்பவும் அழகாய் இருக்குதென் றெண்ணி சந்தோஷப்பட்டு உம்மைப் பிடித்துக்கொண்டு போய் விடுவார்கள் உமக்கு அனேகவிதமான சோடிப்புக ளெல்லாம் சோடித்து அதில் அவன் யேறி ஊர்பவனிவந்து அந்த சுவர்க்க லோகத்துக்கு வருவான் அந்த வாசற்படியில் ஒருகாலும் வெளி யில் ஒருகாலுமாக இருக்கும்போது நீர் துள்ளி அவனை கீழே போட்டுவிட்டு அவனுடைய றூஹைறவாங்கி வாருமென்று திரு வுளமானான்.

அதுபோல அவர்கள் காளைவாகனமாக வடிவெடுத்து அந்த மாட்டு மந்தையில் வந்து நின்றார்கள். மாடு பார்க்க வந்தவர்கள் எல்லாமாட்டையும் பார்த்தார்கள் அவர்களுக்கு ஒன்றும் பிடிக்க வில்லை இந்த மாடுகள்தான் ரொம்ப உயரமாகவும் ரொம்ப வடிவ மாகவும் ரொம்ப அழகாகவுமாயிருந்தது. இதுதான் தேவலை யென்று இந்த மாட்டைப் பிடித்துக்கொண்டுபோய் அவன் முன்னே விட்டார்கள். அவன் இந்த மாட்டைக்கண்டு ஆசைப் பட்டு இதுநாள் வரையிலும் இந்த மாடு நம்மள் மாட்டு மந்தை யில் நின்றது நமக்குத் தெரியாதல்லவோ போய்விட்டது என்று எண்ணி அந்த மாட்டை நல்ல சோடிப்புகளாக சோடிக்கச் சொன்னான். இதுபோல் அவர்கள் நவநீதமாக அந்தமாட்டைச் சோடித்தார்கள். அவன் அதிலேயேறி 18-மேளவாத்தியங்கள் முழங்க ஊர்பவனிவந்து எல்லாத் தெருக்களெல்லாம் சுத்திவந்த பின் சொல்லுவான் நம்மள் கட்டிய சுவர்க்கலோகத்திற்குக் கொண்டுபோங்க ளென்று உத்திரவு செய்தான்.

அதுபோல அவனுடைய காலாள்கள் மாட்டைத் திருப்பி சுவர்க்கலோகத்து வாசல் முகப்பில் கொண்டுவந்து நிறுத்தி னார்கள். அப்போது அவன் மாட்டை சுவர்க்கலோகத்திற்கு முன்னே கொண்டுபோக மாட்டைத்திருப்பி ஒருகால் வெளி யிலும் ஒருகால் வாசற்படியிலுமிருக்கும்போது அந்தமாடு துள் ளிக் கீழே அவனை போட்டுவிட்டு அவனுடைய றூஹை இசுறு

யில் அலேகிஸ்ஸலாம் கைபத்திக்கொண்டு போனார்கள். அந்தச் சுவர்க்கலோகமும் எவர்களுக்குந் தெரியாமை மறவாக மறைந்து விட்டது. இன்னம் அனேக தங்கம் பொன் வெள்ளி இதுகளைச் சேகர்ஞ் செய்து அவன் சுவர்க்கலோகம் போகிறதற்கு முந்தி இந்த பணங்களை என்னசெய்தானென்றால் கல்லினால் சில கட்டிடங்கள் கட்டி அதுக்கு உள் சுரங்கங்கள் தைத்துமண் என்னப் பட்ட தாளியில் 70,000 தாளியில் திரவியங்களைப் போட்டு 10-இடங்களில் கெட்டியாக செய்துவைத்தான்.

ஒரு தாளியில் போட்டிருக்குந் தங்கங்களாவது 20,000 காசுகளாகயிருக்கும் ஒவ்வொரு காசுகளுடைய விலையாகிறது 55 ரூபாய் விலையாகயிருக்கும் ஆகாகா யெப்பேர்ப்பட்ட சுகங்களை அனுபவித்தும் கோடானகோடி திரவியங்களைச் செலவு செய்தும் நவநீதம் பொருந்திய சுவர்க்கலோகங்காட்டி என்றைக்கும் அதிலே இருந்து அனுபவிக்கலாமென்று செய்தானே ஒருநாளாவது அந்தவீடு அவனுக்கு அனுபவிக்க இடங்கொடுக்க வில்லையே நீங்கள் சேகரம்செய்த பணங்களாகிறது உங்களுக்கு என்ன பலனைக் கொடுக்கப்போகிறது அல்லாவுடைய வீடுகளை நீங்கள் பேணாமல் போட்டுவிட்டு நீங்கள் இருக்கும்படியான வீடுகளை அனேகம் திரவியங்களைச் சிலவு செய்துகட்டினீர்களே நீங்கள் மவுத்தாகி நரகவேதனைகளாகயிருக்கும்போது சபானி யென்ற மலக்குகள் நெருப்பு சுக்குமாந் தடிகளைக்கொண்டு அடிக்கும் போது தேள் நட்டுவாகாலி பாம்புகள் கொத்தி அடிக்கும்போது நீங்கள் கட்டிய வீடுகளும் நீங்கள் சேகரஞ்செய்த பணங்காசுகளும் அதுகள்வந்து உங்களுக்கு நேரிட்ட அதாபுகளை நீக்கி வைக்குமா நீங்கள் பூலோகத்தில் இருக்கும்போது உங்களுக்கு பணங்கள் அதிகமாயிருந்தால் உங்களால் இயன்றமட்டுக்கும் அல்லாவுடைய வீட்டை ஒன்றுகட்டினால் இதுக்குப் பதிலாக ரஹ்மான் உங்களுக்கு மேலாம்பதவியாகிய சுவர்க்கலோகத்திலே ஒன்றுக்கு 70-வீடு கொடுக்கப்படும் ஒவ்வொரு வீடுகளுக்கு 100-கூறுலிங்கப் பெண்களுங் கொடுக்கப்படும். அந்தந்த வீடுகளில் நீங்கள் போய் இருந்து நீங்களும் கூறுலிங்கப் பெண்களும் ஊழி ஊழி காலம்வரைக்கும் ரொம்பவும் ராகத்தாகவும் ரொம்ப குளிர்ச்சியாகவும் ரொம்ப சுகுண்டியாகவும் ரொம்ப இன்பமாகவும் ரொம்ப சந்தோஷமாகவும் என்னாளும் சுபசோபனங் கொண்

டாடி அந்த இடத்தில் தரிபாடாக இருப்பீரகள் மூமீன்களே நீங்கள் பூலோகத்தில் மதிமோசம் போகாமல் நல்ல அமல்களைச் செய்து கோடான கோடியாக நன்மைகளை பெற்றுக்கொள்ள வேண்டியது நன்மைகளைப் பெறுகிற பேர்கள்தான் சுகத்தை அடைவார்கள். நன்மைகளை பெறாத பேர்கள் ஒரு பலனுங் கிடையாமல் நரகவாதிகளாகி கைசேதப் பட்டவர்களாக இருப்பார்கள். இந்த துனியாவில் இருந்துதான் நம்மள் நன்மையைச் சம்பாதிக்க வேண்டியது முதலாவது நன்மையாகிறது தொழுகையாக யிருக்கும். அந்தத் தொழுகையைப் பேணுதலையாக வெடுத்து வாவேண்டியது இந்தத் துனியாவுடைய வாழ்வாகிறது. ஒரு அல்ப நேரத்து வாழ்வென்று தெரியவில்லையா எல்லாத்தையும் நீங்கள் உணர்ந்து நன்மைகளைத் தேடவேண்டியது.

ஆதுமகன் சத்தாது சுவர்க்கங்கட்டிய கிஸ்ஸா

முற்றிற்று.

---



பிஸ்மில்லா ஹிர்றஹ்மான் னிர்றஹீம்

இஃது

ஹஜாத்து அமீறுல் முஃமினீன் அபூபக்கர் ஸித்தீக் குறலியா
லாஹு அனிஹு அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய
அறபு பைத்தை "ஸிவாவுல் இஸ்லாம்" பத்திராதிபராகிய,
ஹஜரத்து மவுலவி ஹாஜி

சேருமீருன் முஹ்யிதீன் சாஹிபவர்களாற் றமிழ

லியற்றிய

# முருது ஹாஸில் முனஜாத்து

அறபு பைத்து

ஜுரப்பி லுத்பிக்க யாயிலாஹீ மன்லஹுஸா துன்கலீல்
முப்லிகன்பி சித்கியஃதீ இந்தபாபிக்க யாஜலீல்

பொருட் கவி

ஆளவருஞ் சவுதாவென்னு மமல்குறைந்த பாவிநான்
ஓவளரு முண்மைகொண்டு வுந்தன்வாசல் வந்ததால்
கோவளருங் கிருபையோடு கொடைகொடுத்து நீயெனக்கு
பூவளரு நல்லுதவி புரிந்தருவாய் யாஜலீல். 1

அறபு பைத்து

கன்புஹுதன் புன் அலீமுன் பக்பிரித்தன் பல் அலீம்
இன்னஹுஷக் ஸுன்கரீபுன் மூதுனிபுன் அப் துன்தலீல்

பொருட் கவி

வாமேவு மெந்தனுக்கு வலியபாவ மிகுதியுண்டு
தீமேவீ மவைகளைநீ தீர்த்தருள்வா யென்கோவே
தாமேவும் பாவியான தன்னடிமை பையனுக்கு
தேமேவு நற்கருணை செய்தருள்வா யாஜலீல். 2

அறபு பைத்து

மின்ஹுஇஸ்யா னுன்விமிஸ்யா னுன்வஸஹவுன் பஅதககசஹ்ஸ்
மின்க்க இஹ்சா னுன்பவஸ்லுன் பஅதயிஅதாய் யிய்ஜலீல்

பொருட் கவி

மருவனைந்த பாவிதன்னில் மறதிமாற்றுத் தவறுதவலு
முருவனைந்து கொண்டு நின்று மோவாதுகின்ற வடியனுக்கு

பெருவணிந்து நன்கொடையும் பேருதவி எரிசைகளுந்
திருவணிந்து செய்வதுடன் ஜெயவருமா யாஜலீல். 3

அறபு பைத்து

காலாயாறப்பீதுனூபீ மிதுலறம்லின் லாயு அத்து
பஅபுஅன்னீ குவ்லதன்பின் பஸ்பஹிஸ்ஸப் ஹல்ஜலீல்.

பொருட் கவி

வேங்கையுறு மடிமையான விள்ளுகின்ற தொண்டனுக்கு
எங்கையுறும் பாவங்கள் தான் எண்ணிறந்த மணல்போல
பங்கையுறும் பாவியின்மேல் பற்றிபூண்டு கொள்வதினல்
புங்கையுறு மவைகளைநீ பொருத்தருள்வா யாஜலீல் 4

அறபு பைத்து

கய்பஹாலி யாயிலாஹீ லய்சலீகய றுல் அமல்
சூவுஅஅமா லுன்கதீறுன் ஸாதுதா அ தீகலீல்.

பொருட் கவி

கோரார்பெரும் பாவியென்னுங் கொடியன்கெதி யெவ்விதமோ,
சீர்பெருகு நற்கிரியை சிறுவனுக்கு வொன்றுமில்லை
பார்பெருகுந் துர்கிரியை பையனுக்கு மிகுதியுண்டு
ஏர்பெருகு நலங்குறைந்த வெனக்கருள்வா யாஜலீல். 5

அறபு பைத்து

ஆபினீமின் குல்லிதாயின் வக்லி அன்னீ ஹாஜத்தீ
இன்னலீகல் பன்ககீமன் அந்தமன்யஷ் பில்அவீல்.

பொருட் கவி

கடுமையான பிணிகளைநீ கருணையோடு நீக்கிவைத்து
மடமையான வென்மனதை மணமதாக்கி வைத்தெந்தன்
நெடுமையான நாட்டங்களை நிறைவியற்றி தந்தியல்பாய்
மிடிமையான துன்பங்களை விரட்டிடுவா யாஜலீல். 0

அறபு பைத்து

குவ்லிநாரின் உப்றுதியா றப்யிஹக் கீக்கமா
குல்த்தஹாயா நாறுகூனீ அந்தபீஹக் கிலகலீல்.

பொருட் கவி

பங்கையுறு நெறுப்புக்குநீ பகர்ந்திடுவாய் வல்லவனே
அங்கையுறு மந்நெருப்பு வடியன் ஹக்கில் குளிர்ந்திடவே

கங்கையுறு முந்தன்கலீல் ஹக்கில்நீயுஞ் சொன்னதுபோல்
செங்கையுறு மென்ஹக்கிலுஞ் செய்தருள்வாய் யாஜலீல் 7

அறபு பைத்து

அந்தஷாபி அந்தகாபி பூமுஹிம்மா தில்உமூரி
அந்தரப்பூ அந்தஹஸ்பி அந்தலீ நிஅ மல்வகீல்

பொருட் கவி

நேர்பொருந்து நாயகனே நீயேஷாபி நீயேகாபி
நேர்பொருந்து நாயகனே நீமு ஹிம்மா தில் உமூரி
நேர்பொருந்து நாயகனே நீயேஹஸ்பி நீயேறப்பி
நேர்பொருந்து மெனக்குநல்ல நீயே வக்கீல் யாஜலீல்

அறபு பைத்து

றப்பிஹப்லீ கன்ஸபலுலின் அந்தவஹ்ஹா யுன்கரீம்
அஅதினீமா பீலமீரி துல்லனீகை றத்தலீல்.

பொருட் கவி

யாக்கரீமே யுந்தனிட மிருக்கும் பதையல் வரிசைகளை
யாக்கரீமே நன்கொடையா யீந்தேயெந்த தைப்பொருளை
யாக்கரீமே தநதியல்பா யெழிலான நல்தலீலை
யாக்கரீமே காட்டிவைத்து வெனத்தருள்வா யாஜலீல் 9

அறபு பைத்து

ஹப்லனு முல்கன் கபீறன் நஜ்ஜினுமிம் மான காப்பு
றப்பனு இது அந்தகாஜி வல்முகுதீ ஜப் றயீல்.

பொருட் கவி

யாயிலாஹீ பெருக்கமாக வெங்களுக்கு ராஜங்கத்தை
யாயிலாஹீ நன்கொடையா யீந்தெங்க ளச்சங்களை
லாயிலாஹீ நீக்கிவைத்து நீயேராஜி யானபோது
யாயிலாஹீ ஜிபுரியீலு மிரஞ்சிதவார் யாஜலீல் 10

அறபு பைத்து

அன்னமூரா அய்னயீசா அய்னயஹயா அய்னநூஹம்
அந்தயாஸித் தீருஆஸி துப்பிலல்மவ் லல் ஜலீல்

பொருட் கவி

ஏர்பெருகு மூசாவெங்கே யினியஈசா ஏஹயா வெங்கே
பேர்பெருகு நூஹையெங்கே பெரும்பாவி சித்தீ கேநீ
நேர்வருந் தவுபாவை நெடியோன்பாற் றெய்திடுவாய்
ஓர்பெருக நீயெனக்கு ஜெயமருள்வா யாஜலீல் 11

### துஆவேண்டுதல்

அருள்வளரு மாலநபி யவர்கள் தொழர் துதற்கலிமா
அருள்வளரு மபீக்க ரருளி தின் பொருட் சொன்ன
அருள்வளருஞ் சைய்குமீரா னடுமைமுஹிதீ னூல்கிளைக்கும்
அருள்வளரு மினையோது மணவருக்கு மருள் ஆமீன் 12

முருது ஹாஸில் முனாஜாத்து முற்றிற்று.

---

## ஈமான்ஹாஸில் இனிய முனாஜாத்து

### அறபு பைத்து

இலாஹீ லஸ்து லில்பிரு தவ்சி அஹ்லா
வலா அக்வா அலாநாரில் ஜஹீமி
பஹப்லீத் தவ்பத் தன்வக்கிற் துறாபீ
பயின்னக்க கா்பி றுத்தன்பின் அளீமீ

### பொருட் கவி இன்னிசை

பார்வளரு மென்னை யன்பாய்ப் படைத்தானு மென்கோவே
நார்வளரும் பொற்பதிக்கு நான்தருதி வானுமல்ல
சூர்வளருஞ் ஜஹீமென்னுந் துன்பநகர நெருப்பதனை
ஏர்வளரு நான் தாங்க வெந்தனக்கோ வலுவில்லை

பூமேவுங் குற்றமெல்லாம் பொறுத்தானு நாயகனே
பாமேவு மென்னுடைய பாவங்களை நீபொறுத்து
நாமேவுந் தௌபாவை நன்கொடையா யெப்பொழுதுந்
தாமேவு நீயெனக்கே தந்துதவி செய்தருள்வாய்

### முனாஜாத் சொன்னவாகள்

திருவளரு முனாஜாத்தை தீனை ஹியாத் தாக்கிவைத்த
திருவளரு முஹையதீன் சீர்கு[illegible]சேயர்
திருவளரு மப்துர்ரஜாக் தெ[illegible]ள்ளிமாம்
திருவளரு மப்துல்வஹாப் [illegible]ரணி யெடுத்[illegible]த்தார்

ஈமான் ஹாஸி[illegible] இனிய முனாஜாத்து முற்[illegible]ற்று.



---

ஸ்ரீ மகள் வி[illegible]சம் பிரஸ், ஜி. டி. செ[illegible].
Q. H. M. S. 295[illegible] காபி 1000. [illegible]12-6-46